
चांदोबा
चन्दामामा
చందమామ
CHANDAMAMA



# அம்புலிமாமா

*நவம்பர் 1995*



## பொருளடக்கம்





**தனிப்பிரதி ரூ.5.00**

**வருட சந்தா ரூ.60.00**

# மங்கை

## தீபாவளி சிறப்பு ஆலய மலர் - 1995

*அன்பார்ந்த வாசகர்களே!*

மங்கை தீபாவளி மலர் தமிழக மக்கள் அனைவருக்கும் பயன்தரும் ஆலய மலராக—அறிவுக் கருவூலமாக—பக்தி ரசம் கமழும் மலராக மலர்ந்துள்ளது. உங்கள் தூய எண்ணம் பூரிப்புடன் நிறைவுறுமாறு முதுபெரும் ஓவியர் திரு. சில்பியின் வண்ண ஓவியங்கள் மற்றும் வண்ணப் புகைப்படங்களுடன் வண்ண மலராக மலர்ந்திருக்கிறது.

இவ்வாண்டு தீபாவளி அன்று வெளிவரும் சிறப்பு ஆலய மலர் தமிழகத்தின் தொண்டை நாட்டு வைணவத் தலங்களான திருவல்லிக்கேணி பார்த்தஸாரதி ஆலயம், திருவள்ளூர் வீரராகவப் பெருமாள் ஆலயம், திருப்பெரும்புதுர் ஆதிகேசவப் பெருமாள் ஆலயம், காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாள் ஆலயம், திருவஹிந்தபுரம் தேவநாதப் பெருமாள் ஆலயம், ஸ்ரீமுஷ்ணம்பூவராகப்பெருமாள் ஆலயம், திருக்கோவிலூர் திருவிக்கிரம சுவாமி ஆலயம், திருவரங்கம் ஸ்ரீரங்கநாதப் பெருமாள் ஆலயம் பற்றி விரிவான புராண மற்றும் ஸ்தல வரலாறுகளுடன் வெளிவந்துள்ளது. இதன் விலை ரூபாய் 30/—

ஒவ்வொரு முறையும் ஆலய மலர் தீர்ந்துவிட்டதே என ஏமாற்றத்துடன் தொலைபேசி மூலமாகவோ அல்லது கடிதம் எழுதுவதன் மூலமாகவோ தெரிவிக்கும் அன்பார்ந்த வாசகர்கள், இப்போதே உங்கள் ஊர் ஏஜண்டிடம் மலரைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

*இதர விபரங்களுக்கு:*

**மங்கை ஆலய மலர்**
*டால்டன் பப்ளிகேஷன்ஸ்,*
*சந்தமாமா பில்டிங்ஸ்,*
வடபழனி, சென்னை-600026.



அருள்மிகு அத்திவரதர், விஷ்ணு காஞ்சி

# BACK TO SCHOOL WITH CHELPARK

**CHELPARK RANGE OF PRODUCTS**

WAX CRAYONS, WATER COLOUR CAKES, PEN, PENCIL, INK, OIL PASTELS, MOPPLES COLOUR SET, WATER COLOUR SET.




**CHELPARK COMPANY PVT. LTD.**
A-93, Industrial Estate, Rajajinagar,
Phone: 91-080-3351562/3351694
Bangalore - 560 044.




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி'   நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

## நம் நாட்டு மொழிகள் முன்னேறட்டும்



உலகிலேயே ஏதாவது ஒரு நாடு தன் நாட்டு மொழியிலல்லாமல் ஒரு அன்னிய நாட்டு மொழியில் விஞ்ஞானம், பொறியியல், மருத்துவம் போன்ற துறைகளில்! பயில வேண்டியுள்ளது என்றால் அது இந்தியா தான். இந்நாட்டில் பெரும்பாலான பள்ளிக்களும் கல்லூரிகளும் ஆங்கிலத்தையே போதனை மொழியாகக் கொண்டுள்ளன.

சுமார் 45 லட்சம் மக்கட் தொகை கொண்டுள்ள தென் கொரியா கூட எல்லா விஷயங்களையும் கொரிய மொழியில்தான் போதிக்கிறது. நம் நாட்டில் 15க்கும் மேற்பட்ட முக்கிய மொழிகள் இருந்தும் அவை விஞ்ஞானம், பொறியியல் போன்ற துறைகளின் நூல்களை வெளிக் கொணரவில்லை.

போதனை மொழி தாய் மொழியாக இருக்க வேண்டுமா அல்லது வேண்டாமா என்ற விவாதம் இன்னும் நடந்தே வருகிறது. ஆனால் போதிய தரமான நூல்கள் இந்திய மொழிகளில் வெளிவராததால் இன்னமும் பெரும்பாலான கல்லூரிகளில் ஆங்கிலம் போதனா மொழியாக இருந்து வருகிறது.



முன் காலத்தில் சமஸ்கிருதம் அரசாங்க மொழியாகி ஒரு சிலரின் ஆதிக்கத்தில் இருந்தது போல ஆங்கிலேயர்கள் தம் ஆட்சியை நடத்த ஒரு சிலருக்கு ஆங்கிலம் கற்க வசதி செய்து கொடுத்தனர். அவர்களது ஆட்சி அகன்றும், ஆங்கிலம் வேரூன்றி நம் நாட்டு மொழிகள் முன்னேற்றம் அடைவிடாமல் செய்து வருகிறது. எனவே பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் நம் நாட்டு மொழிகள் போதனை மொழிகளாகி நல்ல முன்னேற்றம் காண வேண்டும்.

மதிமுகம்: 97   நவம்பர் 1995   புன்னகை: 5

தனிப்பிரதி: ரூ.5.00   வருட சந்தா: ரூ.60.00



# தாய்மார்களே!
# போலியோவை ஒழிக்க உங்களால்தான் முடியும்.



## டிசம்பர் 9 மற்றும் ஜனவரி 20 தேதிகள் தேசிய போலியோ தடுப்பு தினங்களாக அறிவிக்கப்பட்டுள்ளது.

நீங்கள், ஏற்கனவே உங்கள் குழந்தைக்கு சொட்டு மருந்து போட்டிருந்தாலும், பாதுகாப்புநலன் கருதி மீண்டும் ஒரு முறை உங்கள் அருகில் உள்ள போலியோ தடுப்பு முகாம்களில் டிசம்பர் 9, ஜனவரி 20 தேதிகளில் மூன்று வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு சொட்டு மருந்து போடுங்கள்.

**ஆரோக்கியமான குழந்தைகளின் எதிர்காலம் நம் நாட்டின் எதிர்காலம்.**

**கி.பி. 2000-த்தில் போலியோ இல்லாத இந்தியாவை உருவாக்குவதில் மகிழ்ச்சியுடன் பங்கேற்போம்.**





**PolioPlus**

## டிசம்பர் 9, 1995
## ஜனவரி 20, 1996

தேதிகளை குறித்துக் கொள்ளுங்கள். அவை உங்கள் குழந்தைகளைப் பாதுகாக்கும் நாட்கள்.

# தாய்லாந்தில் ஏழு கட்சிகள் கூட்டாச்சி

**தா**ய்லாந்தின் ஜுலை 25ந் தேதி நடந்த நாடாளுமன்றத் தேர்தலின் சார்ல் தாய் கட்சிக்கு அதிக இடங்கள் கிடைத்தன. அக்கட்சியின் தலைவர் பான் ஹார்ன் சில்பா அர்சா தாய்லாந்தின் 21வது பிரதமரானார். அதற்கு முன் ஆளும் கட்சியாக இருந்த டெமக்ரடிக் பார்ட்டியின் தலைவர் சுவான் லிக் போய் 33 மாதங்கள் பிரதமராக இருந்தார்.

தாய்லாந்தின் முந்தையப் பெயர் சயாம். அங்கு மன்னரின் ஆட்சிதான் இருந்தது. 1932ல் நடந்த புரட்சியால் நாட்டின் தலைவராக மன்னரும், நாட்டை ஆளும் தலைவராகப் பிரதமரும் இருப்பது என்ற ஏற்பாடு அமுலில் வந்தது. தென் ஆசியப் பகுதியில் அன்னியர் ஆட்சியின் கீழ் வராமல் சுயேச்சை நாடாக இருந்த ஒரே நாடு சயாம் தான் என்பது குறிப்பிடத்தக்கது.

சயாம் என்ற பெயரைத் தாய்லாந்து என்று 1939ல் மாற்றினார்கள். 1946ல் பூமிபோல் ஆதல்யதேஜ் சிம்மாசனத்தில் அமர்ந்து கடந்த ஐம்பது ஆண்டுகாலமாக மன்னராக இருந்து வருகிறார். இவர் பான் ஹார்ன் ஷில்பா அர்சாவை 21வது பிரதமராக நியமித்தார்.

தாய்லாந்து நாடாளுமன்றத்தின் மொத்த இடங்கள் 391. இந்தத் தேர்தலில் சார்ல் தாய் கட்சி 92 இடங்களைக் கைப்பற்றின அதிக எண்ணிக்கை உறுப்பினர் கொண்ட கட்சியாக வந்தது. இதற்கு முன் ஆளும் கட்சியான டெமக்ரடிக் பார்ட்டிக்கு 82 இடங்களே கிடைத்தன. இதனால் பெரும்பான்மையுடன் மந்திரி சபை அமைக்கும் நிலையில் எந்தக் கட்சியும் இருக்கவில்லை நியு ஆஸ்பரேஷன் பார்ட்டி (57), பலாங்க தர்மா (23), சோஷல் ஆக்ஷன் பார்ட்டி (22), தாய் சிட்டி ஜன்ஸ் பார்ட்டி (18), மாஸ் பார்ட்டி (3) என்ற இந்த ஐந்து எதிர்க்கட்சிகள் தம் ஆதரவை சார்ல் தாய்கட்சிக்கு அளித்தன. ஷில்பா அர்ச்சாதான் பிரதமராவார் என்று உறுதியானதும் 18 உறுப்பினர்களைக் கொண்ட நாம் தாய் கட்சியும் இந்தக் கூட்டில் சேர்ந்தது. இதனால் இந்த ஏழு கட்சிக் கூட்டின் உறுப்பினர் எண்ணிக்கை 233 ஆகியது.

முதல் ஐந்து கட்சிகளுக்கு ஐந்து துணைப் பிரதமர் பதவிகள் தரப்பட்டன. நாம் தாய் கட்சிக்கு பாதுகாப்பு போக்குவரத்து வேளாண்மை அயல் நாட்டு விவகாரங்கள் என்ற முக்கிய துறைகள் அளிக்கப்பட்டன.

நிலச்சீர்த்திருத்தம் செய்து ஏழைமையை ஒழிப்பதாக இக் கட்சிகள் தேர்தலின் போது மக்களுக்கு வாக்குறுதி அளித்தன.





# சிவநேசர் செய்தது!

சிவபுரியில் சிவநேசன் என்ற வியாபாரி இருந்தார். அவரது இரு மகன்கள் குமரனும், வேலனும் ஆவார்கள். இவர்களில் குமரனை மிகவும் செல்லம் கொடுத்து பெற்றோர்கள் வளர்த்து விட்டனர். குமரன் தாய் சொல்லித்தான் எதையும் செய்யும் நிலைக்குத் தயாரானான். அவனாக எதையும் சிந்தித்துச் செயல்படும் நிலையில் இருக்கவில்லை. ஆனால் வேலனோ இதற்கு நேர்மாறான இயல்பு கொண்டவன். எதையும் தானேயோசித்துச்செயல்பட்டு முடிக்கும் திறமை பெற்றிருந்தான்.

தம் மகன்களிடையே உள்ள இந்த வித்தியாசத்தைக் கண்ட அவர்களின் தாயாரான பார்வதி. தன் இளைய மகன் வேலன் குடும்பத்தை விட்டுப் பிரிந்து போய் விடுவானோ என்று கவலைப்பட்டாள். அதை அறிந்த சிவநேசன் தன் மனைவியிடம் ''கவலைப்படாதே பையன்களை அவர்களது இஷ்டப்பட்டபடி நடக்க விடுவதே நல்லது. வேலன் நல்ல புத்திசாலி'' என்று தேற்றினான்.

குமரனும் வேலனும் வளர்ந்து பெரியவர்களானார்கள். சிவநேசன் அவர்களுக்கு வியாபார நுணுக்கங்களைக் கூறி பயிற்சி அளிக்கலானார். அப்போது வேலன் திறமையுடன் வியாபாரம் செய்யக் கூடியவன் என்பதை அவர் கண்டு கொண்டார். சிவநேசனின் வியாபாரக் கூட்டாளிகளும் நண்பர்களும் வேலனின் திறமையைக் கண்டு மிகவும் பாராட்டினார்கள். குமரனைப் பற்றி அவர்கள் ''அவன் மிகவும் நல்லவன். சாது. நேர்மையானவன்'' என்று மட்டுமே கூறி வந்தார்கள்.

ஒரு நாள் சிவநேசன் வேலனை அழைத்து. ''வேலா! இனி நீ தனியாகவே வியாபாரம் செய்யலாம். நான்

—சுதா கிருஷ்ணசாமி—

என் வியாபாரத்தை ஆரம்பித்தபோது கையில் போதிய பணம் இல்லாது போனதால் கூட்டாளிகளைச் சேர்த்துக் கொள்ள வேண்டியதாயிற்று. இப்போதோ என்னிடம் என் திறமையால் அடைந்த லாபப் பணம் நிறைய இருக்கிறது. நீ தனியாகப் போய் வியாபாரம் செய்வதற்கு வேண்டிய முதலை நான் கொடுக்கிறேன். அதைக் கொண்டு நீ நம் ஊரின் பக்கத்திலுள்ள திருப்பூருக்குப் போய் உன் வியாபாரத்தைத் தொடங்கு. அங்கு பருத்தி நிறைய கிடைப்பதால் பஞ்சு வியாபாரத்தில் ஈடுபட்டு நல்ல முன்னேற்றம் அடைவாய்'' என்றார்.



வேலனும் அப்படியே செய்வதாகக் கூறவே சிவநேசனும் ''இன்னொரு விஷயம். என் கூட்டாளி சபாபதி என்பவருக்கு இரண்டு பெண்கள் இருக்கிறார்கள். மூத்தவள் வள்ளி. இளையவள் பூங்கோதை. அவர் தம் இரு புதல்விகளை உனக்கும் உன் அண்ணனுக்கும் மணம் செய்து வைக்க விரும்புகிறார். இருவரில் வள்ளி மிகவும் புத்திசாலி. பூங்கோதையை அவளுக்குச் சமமாகக் கூற முடியாது என்றாலும் மிகவும் நல்லவளே. வள்ளியை உன் அண்ணன் குமரனுக்கும், பூங்கோதையை உனக்கும் மணம் செய்து வைக்க நினைக்கிறேன். உனக்கு இது சம்மதமா?'' என்று கேட்டார்.

வேலனும் சற்று யோசித்து விட்டு ''நான் பூங்கோதையை ஓரிரு முறைகளில் பார்த்தும் இருக்கிறேன். அவளை மணக்க எனக்குச் சம்மதமே'' என்றான். சிவநேசன் திருமண ஏற்பாடு பற்றித் தன் மனைவியிடம் கூறிய போது அவள் மகிழ்ந்த போதிலும் வேலன் திருப்பூருக்குப் போய்த் தனியாக வியாபாரம் செய்யப் போகிறான் என்பதைக் கேட்டு வருத்தமே அடைந்தாள்.

சில நாட்களுக்குப் பின் சிவநேசன் குமரனுக்கு வள்ளியையும், வேலனுக்கு பூங்கோதையையும் மண முடித்து வைத்தார். அதன் பின் அவர் வேலனையும் பூங்கோதையையும் திருப்பூருக்கு அழைத்துக் கொண்டு போய் அங்கு அவர்கள் இருக்க வீட்டையும், வியாபாரம் செய்யக் கடை



யையும், ஏற்படுத்திக் கொடுத்து விட்டு ஊர் திரும்பினார்.

கிளம்புமுன் அவர் தம் மகனிடம் ''வேலா! இவ்வளவு நாட்களாக வியாபாரம் என்றே கிடந்து மிகவும் களைத்துப் போய் விட்டேன். இங்கு நல்ல மலைக் காற்று வீசுகிறது. இங்கு நானும் உன் தாயாரும் வந்து கொஞ்ச நாட்கள் இருக்கலாம் என நினைக்கிறேன். நீ என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டார்.

வேலனும் உடனே ''இதில் சொல்வதற்கு என்ன இருக்கிறது? இது உங்கள் வீடு. நீங்கள் இங்கே எப்போது வேண்டுமானாலும் வரலாம். எவ்வளவு காலம் வேண்டுமானாலும். ஏன் நிரந்தரமாகவே இங்கேயே இருக்கலாம். வயதான காலத்தில் உங்களைக் காப்பாற்ற வேண்டியது என் கடமை'' என்றான். அது கேட்டு மகிழ்ந்து போய் சிவநேசன் சிவகிரிக்கு வந்தார்.

அவர் தம் மனைவி பார்வதியிடம் நடந்ததைக் கூறவே அவளும் ''உண்மையிலேயே உங்கள் உடல் தளர்ந்து விட்டதா?'' என்று கேட்டாள். சிவநேசன் சிரித்தவாறே ''நான் கூறுவதில் உனக்கு நம்பிக்கை ஏற்படவில்லையா?'' என்று கேட்கவே பார்வதியும் ''வேலனுக்கு வியாபார விஷயத்தில் உங்கள் உதவி தேவையே இல்லை. ஆனால் குமரனால் நீங்கள் இல்லாமல் ஒரு நிமிடம் கூடத் தனியாக இருக்க முடியாது. நீங்கள் திருப்பூருக்கு போன பிறகு வியாபாரம் சரியாக செய்ய முடியவில்லை என்றும் கொஞ்சம் நஷ்டம் ஏற்பட்டு விட்டது என்றும் அவன் கூறினான். அதனால் குமரனைத் தனியே திண்டாட விட்டு விட்டு நாம் திருப்பூருக்குச் செல்வது சரியல்ல'' என்றாள்.

அப்போது சிவநேசன் ''நீ உன் மருமகள் வள்ளியிடம் குமரன் இல்லாத சமயம் பார்த்து நாம் கொஞ்ச நாட்கள் திருப்பூருக்குப் போய் இருப்பதாகச் சொல்லிப் பார். அவள் என்ன சொல்கிறாளென்று பார்க்கலாம்'' என்றார். பார்வதியோ ''ஆகா! அப்படியே செய்கிறேன். ஆனால் வள்ளி நம்மைத் திருப்பூருக்குப் போகவே விட மாட்டாள். நீங்களே பாருங்

களேன். அவள் நம்மை இங்கேயே இருந்து விடத்தான் சொல்வாள். இது உறுதி'' என்றாள்.

ஆனால் மறுநாள் பார்வதி வள்ளியுடன்பேசிவிட்டு வாடிய முகத்துடன் வந்ததைச் சிவநேசன் கண்டார். அவர் என்ன விஷயம் என்று கேட்கவே பார்வதியும் அழாத குறையாக ''என்ன சொல்வது? அவளுக்கு நாம் இங்கே இருப்பதே பிடிக்கவில்லை போல் தெரிகிறது. நான் சொன்னதைக் கேட்டு ஒரு நிமிடம் பேசாமல் இருந்தாள். பிறகு அவள் ''நீங்கள் சொல்வது சரிதான் அத்தை. இவர் எப்படி உங்கள் மகனோ, வேலனும் அப்படித் தானே! நீங்கள் அங்கே போவதில் தவறில்லையே'' என்று பட்டும் படாமல் கூறி விட்டாள். ஆனால் நான் குமரனிடம் கேட்கிறேன். அவன் என்ன சொல்கிறான் என்று பார்க்கலாம்'' என்றாள்.

சிவநேசனும் ''நான் அவனிடம் சொல்லி நாம் போக சம்மதிக்க வைக்கிறேன். இன்றைக்குப் பதினைந்தாவது நாள் நாம் இங்கிருந்து கிளம்புவோம்'' என்றார். மறுநாள் அவர் குமரனிடம் ''நான் இப்போதைக்குத் திருப்பூர் போகிறேன். அங்கிருந்து எப்போது திரும்பி வருவேன் என்று திட்டவட்டமாக இப்போது என்னால் சொல்ல முடியாது. வியாபாரத்தை நீயே கவனித்துக் கொள். தேவைப் பட்டால் உன் மாமனார் முருகேசனிடம் யோசனைகேள். ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள். ஒரு வியாபாரி தானே எதையும் முடிவு





செய்ய வேண்டும். பிறர் சொற்படி நடக்கக் கூடாது. அப்போதுதான் வியாபாரத்திலும் சரி அல்லது வாழ்க்கையிலும் சரி நீ முன்னேற முடியும்'' என்றார். இதற்குச் சில நாட்களுக்குப் பின் அவர் தம் மனைவியுடன் திருப்பூருக்குச் சென்றார்.

திருப்பூருக்குச் சென்ற போதிலும் சிவபுரியிலிருந்து அவ்வப்போது சிவநேசனுக்குத் தகவல்கள் வந்து கொண்டிருந்தன. இரண்டு மாதங்கள் கழிந்தன. குமரனின் வியாபாரமும் நன்கு நடந்து வருவதாகவே செய்தி வந்து கொண்டிருந்தது. குமரனுக்கு நல்ல லாபம் கிடைத்து வருகிறது என்பதைக் கேட்டு சிவநேசன் மிகவும் மகிழ்ந்து போனார்.

ஒருநாள் சிவநேசன் வேலனிடம் குமரனின் முன்னேற்றம் பற்றிப் பேசிய போது ''சில நாட்களுக்கு முன் நானும் உன் தாயாரும் இங்கு வருவதாகக் கூறிய போது நீ அது பற்றி முன்னே ஊகித்து விட்டதாகக் கூறினாயே. இப்போது உன் அண்ணன் வியாபாரத்தில் நிலைத்து நல்ல நிலையில் இருப்பதால் நான் இனிமேல் என்ன செய்யப் போகிறேன் என்று சொல்ல முடியுமா?'' என்று கேட்டான்.

வேலனும் ''ஓ! சொல்ல முடியுமே. இங்கு இனி நான் வியாபாரம் செய்ய வேண்டாம் என்று சொல்லி ஊருக்கு வந்து விடும்படி சொல்லப் போகிறீர்கள். இது முன்பே எனக்குத் தெரிந்தது தானே'' என்றான். அதைக் கேட்டு கொண்டிருந்த பார்வதி ஆச்சரியப் பட்டவளாய் ''சிவபுரிக்கா போகப் போகிறோம்? இங்குள்ள வியாபாரம் என்ன ஆவது? நீங்கள் வந்தது வேலனுக்கு உதவியாக இங்கேயே இருக்கத்தானே? நன்றாக இங்கு நடந்து வரும் வியாபாரத்தையா விட்டு விட்டு நாம் எல்லோரும் போகப் போகிறோம்?'' என்று கேள்விகளாக அடுக்கிக் கொண்டே போனாள்.

சிவநேசரும் ''உன் கேள்விகளுக்கெல்லாம் சிவபுரிக்குப் போனபிறகு பதில் கூறுகிறேன்'' என்றார். பார்வதியும் மறுபேச்சுப் பேசாமல் எல்லோருடனும் சிவபுரிக்குச் சென்றாள். ஒருநாள் அவள் தன் கணவனிடம்

''நான் திருப்பூரில் கேட்ட கேள்வி களுக்கு இன்னமும் பதில் கூற வில்லையே'' என்று கேட்டாள்.

சிவநேசரும் ''எனக்கு இரு மகன் களும் ஒன்று போலத்தான். குமரனி டம் முன்பு தானாக எதற்கும் முடிவு எடுக்கும் திறன் இருக்கவில்லை. எதற்கும் பிறரை எதிர்பார்க்கும் இயல்பு அவனிடம் சிறுவயது முதலே இருந்த வரவே அதை மாற்ற நினைத் தேன். அதற்காகத்தான் சகோதரி களில் அதிக புத்திசாலியான வள்ளி யைக் குமரனுக்கு மணம் செய்து வைத்தேன்'' என்றார்.

பார்வதியும் ''வள்ளி அப்படிப் பட்ட புத்திசாலி என்றால் குமரனுக்கு யோசனைகள் கூறி இருக்கலாமே'' என்றாள். சிவநேசரும் ''நான் இங்கே இருக்கும்வரை குமரன் எதற்கும் என்னைத்தான் எதிர்பார்ப்பான் என் பதை வள்ளி ஊகித்துவிட்டாள். அத னால்தான் நாம் திருப்பூர் போவதாகக் கூறிய போது பட்டும் படாமல் பதில் சொன்னாள். இதையெல்லாம் புத்தி சாலியான வேலன் முன் கூட்டியே ஊகித்து விட்டான். குமரனும் நான் இல்லாத போது வியாபார நுணுக்கங் களைப் புரிந்து கொண்டு நல்ல தேர்ச்சி பெற்று விட்டான். எதற்கும் தானே முடிவு எடுக்கும் திறமையை யும் பெற்றுவிட்டான். எனவே நான் திட்டம் போட்டு இவற்றைச் செய்தது நல்ல பயனையே தந்தது. இனி வேல னும் திருப்பூரில் இருக்க வேண்டிய அவசியம் இல்லை. இங்கேயே இனி இரு சகோதரர்களும் ஒருவனுக்கு மற்றவன் துணையாக இருந்து தம் வியாபாரத்தை நன்கு நடத்தி வருவார் கள்'' என்றார்.

பார்வதியும் ''என்னிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லாமலேயே இவ்வளவும் நீங்களே செய்து முடித் தீர்கள். உண்மையிலேயே நீங்கள் மிகவும் சாமர்த்தியசாலிதான். இதை நான் தெரிந்து கொள்ளாமல் என் மனதில் குழம்பிக் கொண்டே இருந் தேனே!'' என்று கூறித் தன் கணவனை மிகவும் பாராட்டினாள்.



# தன்னலமற்ற கோரிக்கை

ஒரு நாள் ஒரு கிழவன் ஒரு மலை அடிவாரத்தில் ஒரு மூடியுடன் கூடிய பாட்டிலைக் கண்டான். அவன் அதை எடுத்து அதன் மூடியைக் திறந்ததும் அதிலிருந்து ஒரு பூதம் வெளிப்பட்டது. அது அவனிடம் ''நீண்ட காலமாக அடைபட்டிருந்த என்னை நீ விடுவித்ததற்கு நன்றி. உனக்கு ஒரே ஒரு வரம் கொடுக்கிறேன். அதைக் கேள். ஆனால் அது தன்நலமற்றதாய் இருப்பதாக நான் திருப்தி அடைய வேண்டும்'' என்றது.

கிழவனும் ''நானும் என் சகோதரனும் எப்படியோ பிரிந்து விட்டோம். எங்களை ஒன்று சேர்த்து வை'' என்றான். பூதமும் ''ஆகா என்ன சகோதரபாசம்!'' எனக் கூறி மாயமாய் மறைந்து சற்று நேரத்திற்கு பின் வந்து ''உன்னை உன் சகோதரனே தேடிக் கொண்டு இங்கு வருவான். உன் சகோதர பாசம் பாராட்டத் தக்கது. இனி நீ சாகும் வரை அவனோடு தான் இருப்பாய். திருப்தி தானே'' என்றது.

கிழவனும் ''திருப்தியே. வருபவன் இந்நாட்டு மன்னனான என் அண்ணன். என்னை விட பத்து வருடம் பெரியவன். அவனுக்குக் குழந்தை பிறக்கவில்லை. அதனால் அவனுக்குப்பின் நானே இந்நாட்டு மன்னன்'' என்றான்.

அது கேட்டு பிசாசு! ஓ! இது வா உன் பாசம்!'' எனக் கத்தியவாறே ஓடி மறைந்தது.






# 4

(ஒற்றைக் கண் ராட்சஸனிட மிருந்த தப்பிய ரூதரனும் அவனது ஆட்களும் நௌகா தீவை அடைந்து அதன் மன்னன் சித்திராசுவனிடம் பெரும் உதவி பெற்றார்கள். அவன் காற்றுகளை எல்லாம் அடக்கி பையில் போட்டுத் கொடுத்தான் ரூபதரனின் கப்பல்கள் தாய் நாட்டை அடைய இருக்கையில் அவனது ஆட்கள் அந்தப் பையைத் திறந்து காற்றுகளை வெளியே விட்டார்கள். அதனால் ரூபதரனின் கப்பல்கள் துருவப் பகுதிக்கு அடித்துச் செல்லப்பட்டன. அங்குள்ள ராட்சஸர்கள் ரூபதரனின் ஆட்களைக் கொன்று கப்பல்களை அழித்தார்கள். ரூபதரனின் கப்பல் மட்டும் தப்பியது. அதன் பிறகு-)

ரூபதரன் எஞ்சிய ஆட்களுடன் தன் கப்பலில் பயணமானான். தன் மற்ற ஆட்களும் கப்பல்களும் அழிந்ததற்கு வருந்தியும் தான் ஒரு சிலருடன் தன் கப்பலோடு தப்பியதற்காக மகிழ்ச்சியும் அவன் அடைந்தான். சில நாட்களுக்குப் பின் அவனது கப்பல் ஒரு தீவை அடைந்தது. அங்கு சுகேசினி என்ற ஒரு தேவதை இருந்தாள். அவள் சூரியனுக்கும் வருணனின் மகளுக்கும் பிறந்தவளாம். மனிதர்களின் மொழியை அவள் பேசிய போதிலும் மனிதர்களுக்கு நன்மை புரியும் இயல்புடையவள் அல்ல.

ரூபதரன் இதை அறிந்திருக்கவில்லை. அவன் தன் கப்பலை அத் தீவின் கரையில் நிறுத்திக்கட்டிவிட்டு இரண்டு நாட்களை கடற்கரையிலே கழித்தான். அப்போது அவனது ஆட்கள் தம் நாட்டிற்குத் திரும்பும் நம்பிக்



கையை இழந்து கவலையில் மூழ்கிப் போனார்கள். மூன்றாவது நாள் ரூபதரன் தன் வாளையும் ஈட்டியை யும் எடுத்துக்கொண்டு ஒரு உயரமான இடத்தில் நின்று சுற்றிலும் பார்த் தான். அவன் பார்வையில் யாருமே தென்படவில்லை. ஆனால் கொஞ்ச தூரத்தில் ஒரு தோப்பின் நடுவே இருந்த சுகேசினியின் வீட்டிலிருந்து புகை வந்து கொண்டிருப்பதை கண் டான்.

அந்த இடத்திற்கு முதலில் தானே போய்ப் பார்ப்பது என்று ரூபதரன் தீர்மானித்தாலும் பிறகு யோசித்து தன் ஆட்களில் சிலரை அனுப்புவது என்று எண்ணி அங்கிருந்து இறங்கி வந்தான். அன்று சாப்பிட எதுவும் இல்லையே என அவன் கவலைப் பட்டுக் கொண்டே நடந்து வந்து கொண்டிருந்த போது சற்று தூரத்தில் ஒரு மான் போய்க்கொண்டிருப்பதை கண்டான்.

அவன் உடனே அதன் பின்னால் ஓடித் தன் ஈட்டியை விட்டெறிந்து அதனைக் கொன்றான். அதனைச் சுமந்து கொண்டு தன் ஆட்கள் இருந்த இடத்திற்கு வந்து "பார்த்தீர்களா! நாம் பட்டினிகிடந்து சாகக் கூடாது என்பதற்காகக் கடவுள் இதனை நமக்கு அளித்திருக்கிறார். எழுந்திருங் கள் கை கால்களைக் கழுவிக் கொண்டு இதனை வாட்டுங்கள். எல் லோரும் சாப்பிடுவோம். நாம் உயிர் வாழக் கடவுளே இனியும் வழி காட்டுவார். கவலை வேண்டாம்" என்று கூறி அவர்களை உற்சாக மூட் டினான்.

உண்ணக் கிடைத்தது மான் மாமி சம் என மகிழ்ந்து அந்த ஆட்கள் உற் சாகத்துடன் எழுந்தனர். கை கால் களைக் கழுவிக் கொண்டு வந்து நெருப்பு மூட்டி ரூபதரன் கொண்டு வந்த மானை வாட்டினார்கள். யாவ ரும் அந்த மாமிசத்தை உண்டு மதுவை அருந்தி அன்றைய இரவைக் கடற்கரையில் சந்தோஷமாகக் கழித் தனர்.

மறுநாள் காலை ரூபதரன் தன் ஆட்களையெல்லாம் ஒன்று கூட்டி "நண்பர்களே! நமக்கு இந்த தீவு மிக வும் புதிது. திக்குத் தெரியாத காடு

போலத்தான் உள்ளது.' நாம் என்ன செய்ய வேண்டும்? கை கட்டிக் கொண்டு பேசாமல் உட்கார்ந்திருப்பது சரியல்ல. ஏதாவது செய்யத்தானே வேண்டும். நான் அதோ தெரியும் உயரமான இடத்தில் நின்று பார்த்தேன். இது ஒரு தீவு. கண்ணுக்கெட்டிய தூரம் வரை மறுபுறக் கடற்கரை தென்படவில்லை. இதில் மலை, மடு என்றெல்லாம் எதுவும் தென்படவும் இல்லை. ஓரிடத்தில் ஒரு தோப்பின் நடுவே ஒரு வீட்டையும் அதிலிருந்து புகை கிளம்பி வந்து கொண்டிருந்ததையும் கண்டேன். அதனால் அங்கு யாரோ இருக்கிறார்கள் என்பது மட்டும் தெரிகிறது'' என்று கூறினான்.



இதைக் கேட்டதும் ரூபதரன் ஆட்கள் மிகவும் பயந்து போனார்கள். ஏனெனில் இதற்கு முன் ஒற்றைக் கண் ராட்சஸன், மனிதர்களைக் கொன்று தின்னும் ராட்சஸன் என்றெல்லாம் பார்த்தவர்கள் தாமே அவர்கள்! எனவே அவர்களையும் அறியாமலே கண்ணீர் அவர்களது கண்களில் நிறைந்து விட்டது.

ரூபதரன் அவர்களிடம் பயம் வேண்டாம் எனக் கூறி, அவர்களை இரு பரிவுகளாகப் பிரித்தான். ஒரு பிரிவிற்கு அவனே தலைமைப் பொறுப்பை ஏற்றான். மற்றதற்கு மாயாவி என்பவனைத் தலைவனாக்கினான். தோப்பில் யார் இருக்கிறார்கள் என்பதைக் கண்டறிய எந்த பிரிவு செல்வது என்பதற்குத் திருவுள்ளச் சீட்டு முறை கையாளப்பட்டது. இரு சீட்டுகளில் பெயர்கள் எழுதப்பட்டு ஒன்றை எடுத்துப் பார்த்தார்கள். அதில் மாயாவியின் பெயர் இருந்தது. மாயாவியும் தன் இருபத்திரெண்டு ஆட்களுடன் அங்கிருந்து கிளம்பிச் சென்றான்.

கொஞ்ச தூரம் போனதும் அவனுக்கு சுகேசினியின் வீடு சற்றுப் பள்ளமான இடத்தில் இருப்பது தெரிந்தது. அது கற்களால் கட்டப்பட்ட அழகான வீடு. அதைச் சுற்றிலும் திறந்தவெளியாக இருந்தது. வீட்டைப் சுற்றிலும் ஓநாய்களும், சிங்கங்களும் இருந்தன. அவை உண்மையில் மிருகங்களல்ல! மனிதர்களாக இருந்தவர்கள் மிருகங்க



மானிடப் பெண்ணாகவோ அல்லது தேவ கன்னியாகவோ தான் இருக்க வேண்டும். அவளிடம் பேசி பார்க்கலாம்'' என்றான். உடனே எல்லோரும் உரத்த குரலில் அவளை வெளியே வரும்படி அழைத்தார்கள். அவளும் வெளியே வந்து ''நீங்கள் என் விருந்தாளிகள். உங்களை வரவேற்று உபசரித்து விருந்தளிக்க வேண்டியது என் கடமை. வாருங்கள்'' என்று கூறி அவர்களை எல்லாம் உள்ளே வரும்படி அழைத்தாள்.

அவர்களும் உடனே உள்ளே சென்றனர். ஆனால் மாயாவி மட்டும் ஏதோ சந்தேகப்பட்ட வெளியிலேயே நின்று விட்டான். சுகேசினி வீட்டிற்குள் அழைத்துச் சென்றவர்களுக்கு நல்ல உணவும் இனிய பானமும் கொடுத்து உபசரித்தாள். அவற்றில் அவள் ஏதோ மருந்தைக் கலந்திருந்ததால் அவர்கள் அவற்றை உண்டதும் மெய்மறந்து விழுந்தனர். அவர்களை அவள் தன் மந்திரக் கோலால் தட்டி அவர்களை எல்லாம் பன்றிகளாக மாற்றி விட்டாள். அவர்கள் பன்றிகளான போதிலும் அவர்களது இயல்பு மட்டும் மாறாமல் மனிதர்களைப் போலவே இருந்தது. அவள் அவர்களை எல்லாம் ஓட்டிப்போய் பன்றிக் கொட்டிலில் அடைத்தாள்.

சுகேசினியின் மாய வலையில் சிக்காத மாயாவி அதை எல்லாம் பார்த்தான். அவனுக்கு துக்கம் நெஞ்சை அடைத்ததுக் கொண்டு வந்தது. தன்னு

ளாக்கப்பட்டனர். சுகேசினி மனிதர்களைத் தன் மருந்து மாயத்தால் இவ்வாறு மாற்றி இருந்தாள். அதனால் தான் அம் மிருகங்கள் மாயாவீயின் ஆட்களின் மீது பாயாமல் நாய் போல் வாலை ஆட்டி பரிவுடன் அவர்களருகே வந்தன. ஆனால் அந்த ரகசியம் தெரியாமல் மாயாவியின் ஆட்கள் பயந்து போனார்கள்.

அவர்கள் அந்த வீட்டின் வாசலில் நின்று குரல் கொடுத்தார்கள். வீட்டினுள் சுகேசினி துணி நெய்து கொண்டே இனிமையாக பாடிக் கொண்டிருப்பது அவர்களது காதுகளில் விழுந்தது. அப்போது மாயாவியின் ஆட்களில் ஒருவன் ''இவ்வளவு இனிமையாகப் பாடுபவள் ஒரு



டன் வந்தவர்கள் எல்லாம் பன்றி களாகி விட்டார்களே என்று வருந்தி அங்கிருந்து வந்து கடற்கரையை அடைந்தான். அவனால் சட்டென எதையும் ரூபதரனிடமோ மற்றவர் களிடமோ கூற முடியவில்லை. வெகு நேரம் வரை கண்ணீர் வடித்தபடியே உட்கார்ந்திருந்தான்.

ரூபதரன் அவனிடம் பலமுறை என்ன நடந்தது என்று கேட்டான். முடிவில் மாயாவி "நாங்கள் அந்தத் தோப் பினுள் சென்றோம். அங்கு கற் களால் கட்டப்பட்ட அழகான வீடு ஒன்று இருந்தது. அதனுள் ஒரு பெண் துணி நெய்து கொண்டு இனிமையாகப் பாடிக் கொண்டிருந்தாள். நாங்கள் அவளைக் கூப்பிடவே அவள் வெளி யே வந்து எல்லோரையும் உள்ளே அழைத்துச் சென்றாள். நான் மட்டும் சந்தேகப்பட்டு வெளியிலேயே நின்று கொண்டிருந்தேன். உள்ளே போன நம் ஆட்கள் திரும்பி வரவே இல்லை அந்த மாயக்காரி நம் ஆட்களுக்கு உணவிலோ பானத்திலோ மயக்க மருந்தைக் கலந்து கொடுத்துத் தன் மந்திர சக்தியால் அவர்களை எல்லாம் பன்றிகளாக மாற்றி விட்டாள் என்றே தெரிகிறது" என்றான்.

அதைக் கேட்ட ரூபதரன் அப்ப டியா எனக் கூறி ஆவேசத்துடன் வாளை உருவிக் கொண்டு எழுந்தான். "இப்போதே எனக்கு அந்த வீட்டைக் காட்டு. நான் போய் அவளைச் சித்திர வதை செய்கிறேன் பார்" என்று உறு மினான். மாயாவியோ "வேண்டாம். நான் மறுபடியும் அங்கே போகமாட் டேன். நீயும் அங்கே போக வேண் டாம். நாம் அங்கே போனால் திரும்பி வர மாட்டோம். அவள் நம்மையும் மயக்க மடையச் செய்து எதாவது ஒரு மிருகமாக மாற்றிவிடுவாள். நாமா வது எஞ்சியவர்களுடன் நம் நாட்டை அடைய வேண்டும். எனவே நாம் இத் தீவை விட்டு இப்போதே போய் விட லாம். இங்கே இருந்தால் ஆபத்து தான்" என்றான்.

ரூபதரனோ "மாயாவி! நீ வரா விட்டாலும் நான் அங்கே போகத்தான் போகிறேன். நம்மோடு வந்தவர்களை இப்படியே விட்டு விட்டு நாம் மட்டும் திரும்பச் செல்வது சரியல்ல.



அதனால் நான் போய் அவர்களை மீட்டு வர முயற்சி செய்கிறேன்'' என்று கூறி விட்டு சுகேசினியின் வீட்டை நோக்கிச் சென்றான். நடுவழியில் அவனைக் கண்ட ஒரு இளைஞன் ''அட பாவமே! நீயும் போய் அந்தச் சுகேசினியிடம் மாட்டிக் கொள்ளப் போகிறாயா? உன் ஆட்களை எல்லாம் பன்றிகளாகி விட்டார்கள். நீயும் அவர்களைப் போலாக விரும்புகிறாயா? உனக்குப் பயம் இல்லை என்றால் நான் ஒரு மூலிகை கொடுக்கிறேன். இதனால் சுகேசினி உனக்கு மருந்தைக் கலக்கிக் கொடுக்கும் பானம் எந்தக் கெடுதலையும் செய்யாது. உன்னைத் தன் மந்திரக் கோலால் தட்ட வரும் போது நீ வாளை உருவிக் கொண்டு அவளைத் தாக்கப்போ. அவள் பயந்து போய் உனக்கு மனைவியாவதாகக் கூறுவாள். ஆனால் அவள் உனக்கு எவ்விதக் கெடுதலையும் செய்யக் கூடாது என்று தேவதைகள் மீது சத்தியம் செய்து கொடுத்த பிறகே நீ அதற்குச் சம்மதி'' என்று கூறிச் சுற்றிலும் பார்த்து ஒரு மூலிகையைப் பிடுங்கி எடுத்துக் கொடுத்தான்.

ரூபதரன் அதை வாங்கிக் கொண்டு மெதுவாக நடந்தவாறே யோசிக்கலானான். அவன் சுகேசினியின் வீட்டை அடைந்து உரத்த குரலில் கூப்பிடவே! அவளும் வெளியே வந்தாள். அவள் அவனை உள்ளே அழைத்துச் சென்றாள். அவள் அவனை நல்ல ஆசனத்தில் உட்காரவைத்து விட்டு உள்ளே போய் அவன் குடிக்கப் பானத்தைத் தயாரிக்கலானாள். அதில் மயக்க மருந்தைக் கலந்து எடுத்து வந்து ரூபதரனின் முன் வைத்தாள்.

ரூபதரன் அதனை எடுத்துக் குடித்தான். ஆனால் அவனிடமிருந்த மூலிகையின் சக்தியால் சுகேசினியின் மருந்து அவனை பாதிக்கவில்லை. அதை அறியாத சுகேசினி மந்திரக் கோலைக் கையில் எடுத்தாள். உடனே ரூபதரன் வாளை உருவிக் கொண்டு அவள் மீது பாய்ந்தான். அதனால் அவள் பயந்து போய் அவனது கால்களில் விழுந்து ''நீ யார்? இங்கே எப்படி வந்தாய்? உன் சொந்த ஊர் எது? என் மருந்து உன் உடலில் வேலை செய்யவில்லையா? இதையெல்லாம்

பார்த்தால் நீ ரூபதரனாகத்தான் இருக்க வேண்டும். ரூபதரன் என்னைக் காணவருவான் என்று தேவதைகள் முன்பே என்னிடம் கூறி இருக்கிறார்கள். நமக்குள் பகைமை வேண்டாம் வாளைக் கீழே போடு. என்னை நீ மணந்து கொள். நாமிருவரும் சுகமாக வாழலாம்'' என்றாள்.

ரூபதரனும் ''என்' ஆட்களைப் பன்றிகளாக மாற்றி அடைத்து வைத்துள்ள உன்னுடனா உறவு? என்னையும் அவ்வாறு மாற்ற முயன்று அது முடியாமல் போன பிறகுதானே என்னைமணப்பதாகப் கூறுகிறாய்? நீ எனக்கு எந்தக் கெடுதலும் செய்ய மாட்டாய் என்று நீ தேவதைகளின் மீது பிரமாணம் செய்து கொடுத்தாலே உன்னோடு நான் எந்த உறவும் வைத்துக் கொள்ள முடியும்'' என்றான்.

சுகேசினி அவ்விதமே சத்தியம் செய்தாள். அவனைப் பணியாட்கள் நன்கு குளிப்பாட்டி அவனுக்கும் சுகேசினிக்கும் உணவு பரிமாறினார்கள். ஆனால் அவன் அதைத் தொடவே இல்லை. அதுகண்டு சுகேசினி ''இன்னமுமா என் மீது சந்தேகம்? நான்தான் சத்தியம் செய்து விட்டேனே'' என்றாள்.

ரூபதரனும் ''என் ஆட்கள் பன்றிகளாகி இருக்கும் போது என்னால் எப்படி சாப்பிட முடியும்? அவர்கள் முன்போல மனிதர்களாக ஆகி என் முன் வந்தால் தான் என் மனம் நிம்மதி அடையும்'' என்றான். சுகேசினி தன் மந்திரக் கோலை எடுத்துக் கொண்டு போய் ரூபதரனின் ஆட்களை முன்போல மனிதர்களாக ஆக்கிக் தன்னுடன் அழைத்து வந்தாள். ரூபதரனைக் கண்டு அவர்கள் மிகவும் மகிழ்ந்து போனார்கள்.

சுகேசினியும் ''இனி நான் கூறுகிறபடி செய். கடற்கரைக்குப் போ. உன் கப்பலை கட்டி உன் பொருள்களை எல்லாம் ஒரு குகைக்குள் பத்திரமாக வை. பிறகு உன் மற்ற ஆட்களையும் அழைத்துக் கொண்டு இங்கே வந்துவிடு'' என்றாள். ரூபதரனும் அதற்குச் சம்மதித்தான்.

**(தொடரும்)**



# கைத்தடி

வேலூர் வெங்கடசாமி தன் மனைவி வாங்கி வரச் சொன்ன சாமான்களுக்காகப் பல கடைகளுக்குப் போய் அவற்றை வாங்கி ஒரு கூலியாளின் தலையில் வைத்து சுமந்து வரச் சொல்லித் தன் வீட்டிற்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான். அப்போது அவன் தன் கைத் தடி தன் கையில் இல்லாததைக் கண்டான்.

அவன் அதை எதாவது ஒரு கடையில் விட்டிருக்கலாம் என எண்ணித் தான் போன கடைகளில் விசாரித்தான். அவர்கள் எல்லோரும் கடையில் இல்லை என்று கூறிவிட்டனர். கடைசியாக அவன் போன கடையில் விசாரிக்கவே கடைக்காரரும் தன் கடை மூலையிலிருந்த கைத் தடியை எடுத்துக் கொடுத்து ''இது தானே உங்கள் கைத்தடி?'' என்று கேட்டார்.

வெங்கட சாமியும் ''ஆமாம். இந்த ஊரில் நாணயமான கடைக்காரர் நீங்கள் ஒருவர் தாம். நான் கேட்டதும் இங்கே விட்டுப் போன என் கைத் தடியை எடுத்துக் கொடுத்தீர்கள். மற்ற கடைக்காரர்கள் இல்லை என்று சொல்லிவிட்டார்களே'' என்றான்.

கடைக்காரர் அவனை அதிசயமாகத்தான் பார்த்தார்!






# சுகுமாரன் வென்றானா?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தில் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நடுநிசியில் செய்யும் பெரும் முயற்சியைக் கண்டால் நீ மிகுந்த சக்திசாலி எனவும் அறிவாளீ எனவும் தெரிகிறது. சில சமயங்களில் இப்படிப் பட்டவர்கள் கூடத் தம்மைவிடத் தாழ்ந்தவர்களுக்கும் அடிபணிந்து போவதும் உண்டு. நீயும் இந்த நிலைக்கு வந்து விடக் கூடாது என்பதற்காக சுகுமாரன் என்பவனின் கதையைக்கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

சுவர்ணபுரியில் சுகுமாரன் என்ற இளைஞன் இருந்தான். அவன் எல்

## வேதாளம் சொல்லும் கதை



லாக் கலைகளையும் கற்று மிகவும் சிறந்து விளங்கினான். இளம் வயதிலிருந்தே இசை இலக்கியம், போர்க் கலைகள் என்றெல்லாம் அவன் கற்றுக் கொண்டான். இதனால் அவன் தன்னை விட உயர்ந்தவன் யாருமே இல்லை என்று எண்ணித் தலைகால் தெரியாமல் துள்ளவே அவனது தந்தை ''உனக்கு மாணிக்கபுரியிலுள்ள மரகதமணி என்பவரைப் பற்றித் தெரியுமா? அவர் உன்னை விட நிறைய படித்தவர் எனப் பலர் கூற நான் கேட்டிருக்கிறேன்'' என்றார்.

இதைக் கேட்ட சுகுமாரன் மரகத மணியைச் சந்தித்து வாதிட மரகத புரத்திற்குப் சென்றான். அப்போது அவனை மல்லன் என்பவன் கண்டு அவன் போகும் காரணத்தைக் கேட்டறிந்து ''நான் மற்போரில் நான்கு முறை மரகத மணியைத் தோற்கடிக்க முயன்றேன். ஆனால் முடியவில்லை. இப்போது சில புதிய பிடிகளைக் கற்றிருக்கிறேன். முதலில் நீ மற்போரில் என்னைத் தோற்கடி, பார்க்கலாம்'' என்றான்.

சுகுமாரன் மல்லனுடன் மற்போர் புரிந்து தோற்று போனான். அதனால் அவன் மல்லனிடமிருந்தே புதிய பிடிகளை ஒரு வாரத்தில் கற்று மல்லனோடு மறுபடியும் மற்போர் புரிந்து அவனைத் தோற்கடித்தான். அப்போது மல்லன் சுகுமாரனை பாராட்டி ''நீ இனி மரகதமணியைத் தோற்கடிக்க முடியும்'' என்றான்.

நான்கு நாட்களுக்குப் பின் சுகுமாரன் மரகத மணியைத் தன்னோடு மற்போர் புரிய சவால் விட்டான். மரகதமணி அவனை மிக எளிதில் தோற்கடித்தான். அப்போது அவன் ''நீ என்னிடம் தோற்றாலும் நல்ல பயிற்சி பெற்றவன் என்று தெரிகிறது. நீ என் மாணவனாக சிறிது காலம் இருந்தால் உன் எதிர்காலம் மிகச்சிறப்பாக விளங்கும்'' என்றான்.

சுகுமாரனோ ''நான் பல கலைகளைக் கற்றவன். எனவே ஏதாவது ஒரு துறையிலாவது உன்னை நான் தோற்கடிக்க முடியும். அதுவரை நான் உன் சீடனாக இருக்க ஒப்புக் கொள்ள மாட்டேன்'' என்று கூறி விட்டுச் சென்றான்.

மரகதபுரியில் வீரய்யன் என்பவன் வாட்போரில் சிறந்தவனெனப் பெயர் பெற்றவன். ஆனால் அண்மையில் அவனும் மரகத மணியிடம் தோற்றுப் போனவன். எனவே வீரய்யன் யாராவது ஒரு இளைஞனுக்கு வாட் போரில் நல்ல பயிற்சி அளித்து மரகத மணியை தோற்கடிக்கச் செய்ய வேண்டும் எனத் தீர்மானித்தான் அவன் சுகுமாரனைப் பற்றிக் கேள்விப் பட்டு அவனை வரவழைத்து வாட்போரில் அவனது திறமை என்ன என்று பரீட்சித்துப் பார்த்தான். அவன் திருப்தி அடைந்து சுகுமாரனுக்கு மேலும் பயிற்சி அளித்து மரகத மணியை எதிர்க்க அனுப்பினான். அப்படியும் சுகுமாரன் மரகத மணியிடம் தோற்றுப் போனான்.

இப்படியெல்லாம் நடந்தது கண்டு சுகுமாரன் மிகவும் வேதனைப்பட்டான். அவன் தன் மனதில் ''இதுவரை என்னை விட கெட்டிக்காரர்கள் இல்லை என்றே எண்ணி இருந்தேன். ஆனால் இந்த ஊரில் பலர் இருக்கிறார்களே. மற்போர், வாட் போர் போன்றவற்றில் அவர்களிடம் நல்ல பயிற்சி பெற்ற பின்பும் மரகத மணியை என்னால் தோற்கடிக்க முடியவில்லை. இது அதிசயம்தான்'' என்று எண்ணினான்.

அவன் கதைப் போரிலும், வில் வித்தையிலும் மேலும் பயிற்சி பெற்று மரகதமணியுடன் போட்டியிடப் போய்த் தோற்றுப் போனான். அப்போது அவன் மரகத மணியிடம் ''இது வரை உங்கள் சக்தியை அறியாமல்





இருந்தேன். என்னை உங்கள் சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று வேண்டினான்.

அது கேட்டு மரகத மணிசிரித்து ''நீ மாபெரும் வீரன் என்பதில் சந்தேகமே இல்லைதான். ஆனால் நீ முன் கூறிய படி என்னை ஏதாவது ஒரு துறையில் தோற்கடித்து அத்துறையில் நீ என்னை உன் சீடனாக ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்போது மற்ற துறைகளில் நான் உன்னை என் சீடனாக ஏற்றுக் கொள்வேன்'' என்றான்.

சுகுமாரனுக்கும் மரகத மணியை ஏதாவது ஒரு துறையில் தோற்கடித்து விட வேண்டும் என்ற வெறிபிடித்துக் கொண்டது. ஆனால் அது எப்படி முடியும் என்று யோசித்து ஒரு முடிவும் தோன்றாததால் மனம் ஒடிந்து போய் தற்கொலை செய்து கொள்ளத் தீர்மாணித்து அந்நகரை ஒட்டி ஓடும் ஆற்றில் கரைக்குச் சென்றான்.

அங்கு ஒரு யோகி அவனைப் பார்த்து அவனது கவலைக்கான காரணத்தைக் கேட்டார். சுகுமாரனும் தன் மன வேதனையைக் கூறவே அவரும் ''அப்பனே! உன் முகத்தில் தனியொரு ஒளி வீசுகிறது. நீ வேதாந்த விஷயங்களை ஆழ்ந்துபடி. அதில் உன்னை யாரும் வெல்ல முடியாது. மரகத மணிகூட உன்னிடம் தோற்றுப் போனதாக ஒப்புக் கொண்டு விடுவான்'' என்றார்.

சுகுமாரன் அது கேட்டு மகிழ்ந்து அந்த யோகியிடமே ஆறுமாதம் சீடனாக இருந்து வேதாந்த விஷயங்களை நன்கு கற்றான். ஒரு நாள் அவன் அந்த யோகியிடம் ''சுவாமி! வேதாந்தம் என்பது கடல் போன்றது. இப்போது நான் கற்றதைக் கொண்டு மரகத மணியைக் கண்டு வர அனுமதி கொடுக்க வேண்டும்'' என வேண்டினான். அவரும் அவனுக்கு ஆசிகள் கூறி அனுப்பினார்.

சுகுமாரன் நகருக்குள் போய் தான். மரகதமணியைச் சந்திக்க விரும்புவதாகச் சொல்லி அனுப்பினான். மரகத மணிக்கு சுகுமாரன் வேதாந்தத்தில் யோகியிடம் பயிற்சி பெற்று வந்திருப்பது தெரிந்தது. அவன் சுகுமாரனைத் சந்திக்கத் தயாராக இருப்பதாகச் சொல்லி அனுப்பினான். சுகுமாரன்

மரகதமணியுடன் வேதாந்தத்தில் வாதம் புரியப் போகிறான் என்ற செய்தி நகரெங்கும் பரவிவிட்டது.

அதைக் காணப் பண்டிதர்களும், பாமரர்களும் கூட்டமாகக் கூடி விட்டனர். அதற்கு முன் ஒவ்வொரு முறையிலும் சுகுமாரன் தோற்றதையே அவர்கள் பார்த்திருந்தார்கள். இம்முறை அவன் வெற்றி பெறலாம் என யாவரும் எண்ணினார்கள். அதற்குக் காரணம் அவனது முகத்தில் தோன்றிய அலாதி ஒளியே.

குறித்த நேரத்தில் கூட்டம் ஆரம்பமாகியது. அப்போது மரகத மணி "நீ முன்பு மற்போர், வாட்போர், கதாயுத்தம், வில்வித்தை, சாஸ்திர ஞானம் ஆகியவற்றிலெல்லாம் என்னிடம் தோற்றாய். இப்போது வேதாந்தத் துறையில் வாதம் புரிய வந்திருக்கிறாய். முதலில் நீ வேதாந்தத்தில் என்ன தெரிந்து கொண்டாய் என்பதைச் சொல். அதன் அடிப்படையில் நான் என் விளக்கம் கூறி உன்னிடம் கேள்வி கேட்கிறேன்" என்றான்.

அது கேட்டு சுகுமாரன் புன்னகை புரிந்து "ஐயா! வேதாந்தம் கற்று அது பற்றி நான் நன்கு தெரிந்து கொண்டேன். இவ்வுலகில் நாம் அறிந்தது மிகவும் குறைவு. நாம் அறிய வேண்டியதோ எவ்வளவோ உள்ளது. நீங்கள் அறிந்தது எவ்வளவு என்பதை அறியாத நான் என்னை ஒரு மேதாவி என நினைத்துக் கொண்டு உங்களைப் போட்டிக்கு அழைத்தேன். என் அறி



யாமையையும் அகங்காரத்தையும் மன்னியுங்கள். என்னை உங்களது சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள். நான் வேதாந்தத்தில் உங்களோடு வாதம் புரியத் தகுதி பெற்றவன் அல்ல" என்றான்.

அதைக் கேட்ட மரகத மணி திகைத்துப் போய் "ஆம். பல துறைகளில் நான் தான் உயர்ந்தவன் என்று கர்வம் கொண்டிருந்தேன். வேதாந்தம் பிறருக்குள்ள சக்தியை மதிக்கச் சொல்கிறது. இது நாள் வரை அதை நான் உணராமல் இருந்தேன். நான் இத்துறையில் உனக்கு சீடனாகிறேன். மற்ற துறைகளில் நீ எனக்குச் சீடனாகி இரு" என்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி

''மன்னனே! சுகுமாரனும் மரகத மணியும் பேசிக் கொண்டதில் வார்த்தைகளால் ஜாலம் புரிந்தார்கள் என்றே தோன்றுகிறது மரகதமணி முன் சுகுமாரன் நிற்கக் கூடத் தகுதியற்றவன் எனக் கருதுகிறேன். அப்படி இருந்தும் மரகதமணி சுகுமாரனைத் தனக்குச் சமமாகக் கருதியது ஆச்சரியமே. சுகுமாரன் வேதாந்தத்தில் கரை கண்டவன் என்று தவறுதலாக மரகத மணி நினைத்தது விட்டானோ? சுகுமாரன் மரகத மணியிடம் தோற்றானா அல்லது இல்லையா என்பது தெளிவாகத் தெரியவில்லை. இந்த சந்தேகங்களுக்கெல்லாம் சரியான விடைகள் தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''ஒரு அறிவாளியின் சக்தியை மற்றொரு அறிவாளியே நன்கு எடைபோட்டுப் பார்க்கக் கூடியவன். அதனால் மரகதமணி வேதாந்தத்தில் சுகுமாரன் அடைந்துள்ள தேர்ச்சியை அறிந்து கொண்டுவிட்டான். மிக உயர்ந்தவன் எண்ணிக் கொண்டிருப்பவனுக்கு அந்த எண்ணமே அவனது தோல்வியைக் காட்டுகிறது. தாழ்ந்தவனின் வெற்றி தன் எதிரியின் சக்தியை மதிப்பதில் உள்ளது. எனவே சுகுமாரன், மரகத மணி ஆகிய இருவரின் வெற்றி தோல்வியை வேதாந்த அடிப்படையில் காண வேண்டும். வேதாந்தத்தை நன்கு அறிந்தவன் யாருடனும் போட்டி போடவே மாட்டான். ஒரு வேதாந்தி தான் அறிந்ததைப் பிறருக்குப் பகிர்ந்தளிக்க வேண்டும். தனக்குத் தெரியாததை பிறரிடமிருந்து கற்க வேண்டும். இதை முதலில் அறிந்து கொண்டவன் சுகுமாரனே. பிறகே மரகதமணி உணர்ந்து கொண்டான். எனவே வெற்றி அவனுக்குத் தான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக்கிளம்பிப் போய் வேதாளம் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.







# இலக்கியப் படைப்பு

மணிப்புர மன்னன் மரகதசேனன் ஆட்சியில் மக்கள் ஒரு குறையுமில்லாமல் வாழ்ந்து வந்தார்கள். மன்னனின் சபையில் பௌதிகம், வேதியல், தாவரஇயல், போன்ற பல துறை விஞ்ஞானிகளும் இலக்கியத்துறையில் சிறந்த பண்டிதர்களும் கவிஞர்களும் இருந்தனர்.

ஒருநாள் அரச சபையில் விஞ்ஞானிகள் தமது ஆராய்ச்சிகளின் முடிவுகளைக் கூறினார்கள். அது கேட்டு மன்னனும் சபையோரும் அவர்களைப் பாராட்டினார்கள். அப்போது ஒரு கவிஞர் எழுந்து அந்த விஞ்ஞானிகளின் வெற்றிக்குக்காரணமாக இருந்த மன்னனைப் பாராட்டி ஒரு கவிதை புனைந்து கூறினார்.

அதைக் கேட்ட மன்னன் மனதில் ஒரு யோசனை தோன்றியது. சிறந்த விஞ்ஞானிகளும் கவிஞர்களும் கூட்டாக முயன்று ஒரு மாபெரும் காவியம் படைக்கலாமே என்பதுதான் அது. அத்தகைய படைப்பில் விஞ்ஞான விஷயங்களும் இருக்கும் இலக்கியச் சுவையும் நிரம்பி இருக்கும் என அவன் எண்ணினான். எனவே அவன் அவர்களிடம் தன் கருத்தை வெளியிட்டுத் தன்னைப் பற்றி புகழ்ந்து விஞ்ஞானமும் இலக்கியச் சுவையும் கலந்த ஒரு காவியம் எழுதும்படிக் கூறினார்.

அப்போது முதலமைச்சர் ஏதோ கூற எழுந்தார். அதற்குள் மன்னன் சபையை முடித்துவிட்டு வெளியேறி விட்டான். இதற்குப் பின் விஞ்ஞானிகளும் கவிஞர்களும் ஒன்றாகக் கூடி கருத்துப் பரிமாற்றம் செய்து ஒரு காவியத்தைத் தயாரித்தார்கள். அதை ஒரு நாள் அவர்கள் அரச சபையில் வாசித்தார்கள்.

சபையோர் அதைக் கேட்டு முணுமுணுத்தார்கள். ஏனெனில் அதில்

—கி. அருணா—

நவரசங்களான சிருங்காரம், கோபம், ஹாஸ்யம், வீரம், போன்ற ரசங்கள் உரிய இடத்தில் இருக்கவில்லை. மன்னனுக்கே அதைக் கேட்க அலுப்பு தட்டியது. பண்டிதர்கள் அதனைப் படித்துக்காட்டியதும் போதும் என்று கூறி அவன் சபையிலிருந்து சென்று விட்டான்.

அன்று மாலை மன்னன் பூங்காவில் உலாவிக் கொண்டிருந்த போது முதலமைச்சர் அவனை அணுகினார். அப்போது மன்னன் ''அமைச்சரே! என்ன இது! இவ்வளவு சிறந்த விஞ்ஞானிகளும் கவிஞர்களும் சேர்ந்து ஒரு காவியத்தை நன்றாக எழுதிக் கொடுக்க முடியவில்லையே. ஏதோ சிதறிய பொருள்களை எடுத்து ஒரு மூட்டையாகக் கட்டியது போல அல்லவா அவர்களது படைப்பு இருந்தது!'' என்றான்.

முதலமைச்சரும் ''அரசே! அன்றே இதுபற்றிதான் தங்களிடம் பேசஎழுந்தேன். ஆனால் நீங்கள் சபையிலிருந்து போய்விட்டீர்கள். இலக்கியம் வேறு, விஞ்ஞானம் வேறு. இலக்கியப் படைப்பிற்கு கற்பனையும் தனித்திறனும் தேவை. வால்மீகி, காளிதாசன் போன்றவர்களைப் போல மற்றவர்களால் காவியங்களை எழுதிவிட முடியுமா? முடியாது. ஆனால் விஞ்ஞான உண்மைகளை ஒரு விஞ்ஞானி கண்டு பிடித்துக் கூறாமல் போனாலும் வேறொரு விஞ்ஞானியால் கண்டு பிடித்துக்கூற முடியும். விஞ்ஞானிகள் ஒன்று கூடி ஒரு புதிய கண்டு பிடிப்பையும் செய்து விடலாம். ஆனால் இலக்கியப் படைப்பாளிகள் ஒன்று கூடி ஒரு காவியம் படைப்பது என்பது மட்டும் சரிப்பட்டு வராது ஏனெனில் ஒருவரது கற்பனை மற்றவரது போல இராது'' என்றார்.

முதலமைச்சர் இவ்வாறு கூறிய பிறகு தான் மன்னனுக்கு மாபெரும் விஞ்ஞானிகளும் இலக்கிய மேதைகளும் ஒன்று சேர்ந்து கூட்டாக ஒரு மாபெரும் காவியம் ஏன் தயாரிக்க முடியவில்லை என்பதற்கான காரணம் தெரிந்தது.



# வரலாற்று நினைவுகள்

கருத்து: **மீரா உக்ரா** ◆ படங்கள்: **அரித்ரா**

**ப**தினாறாவது நூற்றாண்டில் ஐரோப்பியர்கள் நம் நாட்டிற்கு வந்தனர். அவர்கள் தம் தொழிற்சாலைகளைப் பாதுகாக்கக் கோட்டைகளைக் கட்டினார்கள்.

மதராஸின் செண்ட் ஜார்ஜ் கோட்டை 1640 - 1657 மத்தியில் கட்டப்பட்டது. கூவம் நதி வங்காள விரிகுடாவில் சேருமிடத்தில் இது கட்டப்பட்டுள்ளது. இதனால் இதன் இரு புறங்கள் இயற்கையளித்த நீரால் பாதுகாக்கப்பட்டன. மூன்றாவது புறத்தில் ஆழமான அகழி வெட்டப்பட்டது. மராட்டியர்களும், பிரெஞ்சுக்காரர்களும் இதைப் பலமுறை முற்றுகையிட்டனர். 1758ல் பிரெஞ்சுப் படைகள் இதன் மூன்று புறங்களிலிருந்து பீரங்கிகள் கொண்டு இரண்டு மாதங்கள் தாக்கின. அதன் பின் ஆங்கிலப் படைக்கு உதவ வங்காளத்திலிருந்து படை வந்ததால் பிரெஞ்சுகாரர்கள் பயந்து 52 பீரங்கிகளையும் காயமடைந்த தம் வீரர்களையும் கைவிட்டு விட்டு ஓடிப் போயினர். இதனால் ஆங்கிலேயர் இக் கோட்டையை பார்த்தாலோ மியோராமின்ஸ் மேற்பார்வையில் மேலும் பலமுள்ளதாகச் சீரமைத்துக் கட்டினார்கள்.

பத்து ஆண்டுகளுக்குப் பின் மைசூரிலிருந்து ஹைதர் அலி மதராஸ் நோக்கி



முதன் முதலான அரசியல் கேலிச் சித்திரம்




செண்ட் ஜார்ஜ் கோட்டை, மதராஸ்



வில்லியம் கோட்டை கோபுரம்

படையை நடத்தி வந்தான். 1769 ஏப்ரல் 4ந் தேதி உடன்படிக் கைக்குத் தன் நிபந்தனைகளை விதித்ததோடு கோட்டை மதி லில் ஒரு கேலிச் சித்திரத்தையும் வரைந்து விட்டுப் போனான். ஹைதர் அலி ஒரு ஆங்கில கவர்னரின் மூக்கைப் பிடித்து இழுத் தது போல வரையப்பட்ட அந்த கேலி[illegible]த்திரமே இன்றைய அரசியல் கேலிச் சித்திரங்களுக்கு உலகிலேயே முன்னோடி எனக் கருதப்படுகிறது.

இக் கோட்டையிலுள்ள செண்ட் மேரிஸ் சர்ச்தான் நம் நாட் டில் கட்டப்பட்ட முதலாவது ஆஞ்கிலிகன் சர்ச். 1678ல் கட்டப் பட்ட இது 1758ல் புதுப்பிக்கப்பட்டது. தற்போது இக் கோட்டை யில் தமிழ்நாடு அரசின் தலைமை செயலகமும், அரசின் முக் கிய அலுவலகங்களும் உள்ளன.

கிழக்கிந்தியக் கம்பெனியின் டாக்டர் கேப்ரியல் பௌடன் முகலாய சக்கரவர்த்தி ஷாஜஹானின் மகள் ஜஹனாராவின் நோயைக் குணப்பத்தினார். அதனால் ஷாஜஹான் மகிழ்ந்து அக் கம்பெனிக்கு வங்காளத்தில் சுதந்திர மாய் வியாபாரம் செய்ய அனுமதி அளித்தார். அப்போது வங்காள அரசுப் பிரதிநிதியாக இருந்து சுஜாவின் குடும்பப் பெண்மணிக்கும் இதே டாக்டர் சிகிச்சை அளித்து குணப்படுத்தவே ஆஞ்கிலேயர் களுக்கு 'காலிகாட்' அருகே கோட்டை கட்டிக் கொள்ள அனுமதி பரிசாகக் கிடைத்தது. இக் கோட்டை யைக் கட்ட பதினோறு ஆண்டுகளாயின. இதுவே கல்கத்தாவின் வில்லியம் கோட்டை. 1767 இது கட்டி முடிக்கப்பட்டது.

வங்காள அரசியலில் கம்பெனி குறுக்கிடலாயிற்று. இது வங்காள இளவரசர் சிராஜ் உத்தௌல் விற்குப் பிடிக்கவில்லை. நவாப் அனுமதியின்றி வில்லியம் கோட்டை மேலும் வலுவாக்கப்படவே கோட்டை மதில் மீது பீரங்கிகள் வைக்கக் கூடாதென சிராஜ் உத்தொலா ஆட்சேபித் தார். ஆங்கிலேயர்

**வில்லியம் கோட்டை, கல்கத்தா**

சிராஜ் உத்தௌலா



அவருக்குப் போட்டியாக கிளம்பியவரை ஆதரிக்க, சிராஜ் உத்தௌலா பட்டத்திற்கு வந்ததும் 1756ல் வில்லியம் கோட்டையைத் தாக்கினார். இது கண்டு பயந்து ஆங்கில கவர்னர் ட்ரேக்கும், சில உயர் ஆங்கில ஆதிகாசிகளும் வில்லியம் கோட்டையை விட்டு ஓடி ஒரு கப்பலுக்குள் ஒளிந்து கொண்டார்கள். பாதுகாக்க யாருமில்லை. அக் கோட்டை 1756ல் சிராஜ் உத்தௌலா வசமாகியது. அக் கோட்டையில 146 ஆங்கிலேயர்கள் சிறைப்படுத்தப்பட்டனர். அவர்களை எல்லாம் மிகச்சிறிய அறை ஒன்றில் அடைத்து வைத்தார்கள். மறுநாள் காலையில் அவர்களில், 23 பேரே உயிருடன் இருந்தனர்! இச்சம்பவம் நடந்த அறையை 'ப்ளாக் ஹோல் ஆஃப் கல்கத்தா' என்கிறார்கள்.

நவாபின் இச் செய்கையை எல்லோரும் கண்டித்தனர். ஆனால்



கிழக்கிந்திய கம்பெனி அதிகாரிகளுடன் முகலாய சக்கரவர்த்தி இரண்டாவது ஷா ஆலம்

வரலாற்று வல்லுனர்கள் சிராஜ் உத்தௌலா இதற்குப் பொறுப்பாளியல்ல என்று கூறுகிறார்கள். மற்றும் சிலர் இந்த அறையில் அடைக்கப்பட்டோரின் எண்ணிக்கை குறித்தும் தம் ஐயத்தை வெளிப்படுத்தியுள்ளார்கள்.

இதற்கு ஓராண்டிற்குப் பின் நடந்த ப்ளாசிப் போரினால் நிலை முற்றிலும் மாறுபட்டது. 1756ல் முகலாய சக்கரவர்த்தி இரண்டாவது ஷா ஆலம் ஆங்கிலேயர்களுக்கு வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களில் வரிவசூலிக்கும் உரிமையைக் கொடுத்து விட்டார். வில்லியம் கோட்டையை



ராபர்ட் கிளைவ்

இந்தியாவிலுள்ளவர்கள் எல்லோரும் வந்தாலும் பிடிக்க முடியாது என்று ராபர்ட் க்ளைவ் பெருமை அடித்துக் கொண்டானாம். இப்போது இக்கோட்டை இந்திய ராணுவத்தின் வசமுள்ளது.

கோரிக் கோட்டை 1198ல் கங்கையும் மகாநந்த நதியும் சேரு மிடத்தில் கட்டப்பட்டது. இது வங்காளத் தின் மிகப் பழைய கோட்டை. சிசுபால்கட் பாராசுபதி, நௌகாங்கி, போடா, ஷ்யாம் நகர் முதலிய கோட்டைகள் கிழக் கிந்தியப் பகுதியில் உள்ளவை இது போல் தென்னிந்தியாவில் பாதாமி, திண்டுக்கல், திருச்சிராப்பள்ளி, தலைச்சேரி முதலியவை குறிப்பிடத்தக்கனவாம். மேற்கிந்தியப் பகுதியில் நாபா, பாரிபர்வத் கோட் காங்கரா கோட்டைகளும் மத்தியபாரதத்தில் ஜான்சி, சந்தேரி,

## நம் நாட்டில் முக்கியமான கோட்டைகள்

1. காலிபங்கன்
2. டில்லி
3. அம்பர்
4. பரத்பூர்
5. ஆக்ரா
6. குவாலியர்
7. ரணதம்பர்
8. சித்தூர்
9. கும்பல்கட்
10. ஜோத்புர்
11. ஜெய்சால்மிர்
12. பிகானிர்
13. மாண்டு
14. தௌலாதாபாத்
15. அகமத் நகர்
16. சிவனேர்
17. சிம்ஹகட்
18. ராய்கட்
19. பஞ்ஜ்ரா
20. கவர்ணதுர்க
21. ராஜ்கட்
22. பீடார்
23. ரூல்பர்கா
24. பீஜாபுர்
25. கோல்கொண்டா
26. வரங்கல்
27. ஸ்ரீரங்கப்பட்டணம்
28. செஞ்சி
29. வேலூர்
30. மதராஸ்
31. வில்லியம் கோட்டை
32. ரோஹ்தாஸ்கட்
33. அலகாபாத்
34. சுனார்கட்
35. காலிஞ்ஜர்



பரத்பூர் ஆகியவை முக்கியமானவை.

நம் நாட்டில் 1400க்கும் மேலாகக் கோட்டைகள் உள்ளன. மகாராஷ்டிரத்தில் 656 கோட்டைகளும் மத்தியப் பிரதேசத்தில் 336 கோட்டைகளும் ராஜஸ்தானில் 250 கோட்டைகளும் உள்ளன. பல கோட்டைகள் இடிந்தும் கிடக்கின்றன. இவற்றிலுள்ள சிலைகள் திருடப்படுகின்றன. இவற்றின் படிக் கட்டுகள் இடிந்து பாழ்பட்டுக் கிடக்கின்றன. இவற்றைப் பராமரித்துப் பாதுகாக்க வேண்டியது நம் பொறுப்பே.

 




# பொய் சத்தியம்!

சத்தியன் என்பவனுக்குப் பொய் பேசுவதென்றால் தண்ணீர் பட்ட பாடு. அதனால் யாரும் அவன் பேச்சை நம்பவில்லை இதைக் கண்டு சத்தியன் எதற்கெடுத்தாலும் 'சத்தியமாகச் சொல்கிறேன்' என்று கூறலானான். ஒரு நாள் அவன் அடுத்து வீட் டிற்குப் போன போது அந்த வீட்டிலுள்ள பாட்டி தன் பேரனிடம் ''அந்த பெரியண்ணன் வெறும் மைசூர் போண்டா மாதிரி'' என்றாள்.

பேரன் அவளிடம் மைசூர் போண்டா என்றால் என்ன என்று கேட்க அவளும் ''அது உளுந்தின் மாவைக் கொண்டு எண்ணெயில் பொரிக்கப் படுவது. அதில் மைசூர் இராது. அது போலப் பெரியண்ணனிடம் பெரியது என்று சொல்லக் கூடியது எதுவும் இல்லை'' என்று விளக்கினாள். அப்போது சத்தியன் ''நான் மைசூர் போண்டாவில் மைசூரைப் பார்த்தேன். நான் ஒரு ஹோட்டலில் வாங்கிப் எல்லா மைசூர் போண்டாக்களிலும் மைசூர் என்பது இருந்தது'' என்றான்.

பாட்டியோ ''சத்தியா! நீ சொல்வதெல்லாம் அண்டப் புளுகு'' எனவே அவன் ''பாட்டி! உன்மீது சத்தியமாகச் சொல்கிறேன். மைசூர் போண்டாவில் நான் மைசூரைப் பார்க்கவே பார்த்தேன்'' என்று கூறிவிட்டுப் போனான். மறு நாள் அந்தப் பாட்டி காய்ச்சலாகப் படுத்து விட்டாள். அவள் எல்லோரிடமும் ''அந்த சத்தியன் பொய் சொல்லி என் மீது சத்தியம் செய்ததால் எனக்கு இந்தக் காய்ச்சல் வந்தது'' என்றாள்.

மறுநாள் அந்தப் பாட்டியின் மூத்த மகன் முருகன் சத்தியனின் வீட்டிற்குப் போனான். அப்போது சத்தியன் வீட்டில் இருக்கவில்லை. வேறு சில சத்தியனின் வருகையை எதிர் பார்த்து

—சிவனார் செல்வன்—



அவ்வீட்டுத் திண்ணையில் உட்கார்ந் திருந்தார்கள். அவர்களில் ஒருவன் ராமன் அவன் சத்தியனிடம் ஒருநாள் ''உலகில் வெள்ளைக் காக்காய் உள் ளது'' என்று கூறிப் பந்தயம் கட்டி னான். சத்தியன். ''அப்படி இருந்தால் ஒன்றைப் பிடித்து வந்து காட்டு பார்க் கலாம்'' என்றான்.

இரண்டு நாட்களுக்குப் பின் ராமன் தன் வீட்டுக் கொல்லையில் ஒரு காக் கையின் குஞ்சைப் பார்த்தான். உட னே அவன் ''ஆகா! வெள்ளைக் காக் காய் கிடைத்து விட்டது'' என்று மகிழ்ச்சியுடன் கத்தவே அவனது தாத் தாவோ ''அது பார்க்க வெள்ளையாக இருந்தும் அது பிறக்கையில் ஏதோ ஒரு கோளாறு ஏற்பட்டு இவ்வாறு உள்ளது. இது அதிக நாட்கள் உயிர் வாழாது'' என்றார். ஆனாலும் ராமன் அதைப் பிடித்துக் கொண்டு போய் சத்தியனிடம் காட்டி பந்தயப் பணத்தைக் கொடுக்குமாறு கேட் டான்.

சத்தியனோ ''இதற்கு நான் தான் வெள்ளை வர்ணம் பூசி அனுப்பி னேன். இது காக்கையின் குஞ்சு. காக் கையும் அல்ல'' என்று கூறிப் பணம் கொடுக்க மறுத்தான். ''நீ சொல்வ தெல்லாம் முழுப்பொய்'' என்று ராமன் கூற அவன் ''நான் சொல்வது உண்மை. உன் மீது சத்தியம் செய்து கூறுகிறேன்'' என்றான். ராமன் அவ னைத் திட்டியவாறே போனான். ஆனால் அன்றே சற்று நேரத்திற்குப் பின் அவன் ஒரு புதை மணலில் அகப் பட்டு விட்டான் யாரோ ஒருவன் பார்த்து அவனைக் காப்பாற்றினான். சத்தியன் ஏன் அப்படிப் பொய் சத்தி யம் செய்தான் என்று கேட்கவே ராமன் வந்திருந் தான்.

திண்ணையிலிருந்த மற்றவன் கந் தன் அவன் கோவிலருகே வசித்து வரும் வள்ளியை மணந்து கொள்ள விரும்பினான். அது பற்றி அவன் சத்தியனிடம் கூறவே அவனும் ''அவளுக்கு மூக்கு சப்பையே. அவளையா விரும்புகிறாய்?'' என்று கேட்டான். கந்தனோ ''அப்படி இருந் தாலும் அவளைத்தான் மணப்பேன்'' என்றான்.

இதற்கு இரண்டொரு நாட்களுக்

குப் பின் சத்தியன் வள்ளியைக் கண்டு ''கந்தன் எல்லோரிடமும் உன் மூக்கு சப்பை என்று கூறி வருகிறான். உன்னை உன் பணத்திற்காகத்தான் மணம் செய்து கொள்கிறானாம்'' என்று கூறினான். அது கேட்டு கோபம் கொண்டு வள்ளி கந்தனைச் சந்திப்பதையும் பேசுவதையும் நிறுத்தி விட்டாள்.

வள்ளியின் தந்தை கந்தனிடம் சத்தியன் தான் ஏதோ வள்ளியிடம் சொல்லி இருக்கிறான் எனக் கூறினார். கந்தன் சத்தியனைக் கண்டு ''நீ வள்ளியிடம் என்னைப் பற்றி என்னவெல்லாமோ கன்னா பின்னா வென்று உளறி இருக்கிறாய். நீயே அவனிடம் போய் நீ சொன்னதெல்லாம் பொய் என்று கூறு'' என்றான்.

சத்தியனோ ''ஐயோ! நான் ஒன்றுமே சொல்லவில்லையே. உன் மீது சத்தியமாய் சொல்கிறேன்'' என்றான். இதற்குச் சற்று நேரத்தில் கந்தனுக்கு பலமான அடிபடவே அவன் தன் நினைவை இழந்து விழுந்து விட்டான். அதை அறிந்து வள்ளி பதறிப் போய் ஓடி வந்து அவனது மயக்கத்தைப் போக்கினாள். அப்போது இருவரும் நேருக்கு நேர் பேசியதில் சத்தியனின் புளுகு வெளிப்பட்டது. அது பற்றிச்சத்தியனிடம் கேட்கவே கந்தன் வந்திருந்தான்.

அடுத்து இருந்தவன் கஜபதி அவன் மாந்தோப்பிலிருந்து ஒருவன் நூறு மாங்காய்கள் திருடி எடுத்துச் சென்



றதை சத்தியன் பார்த்தானாம். திருடியவன் கட்டைய்யன் என்று சத்தியன் கூறவே நல்லவன் என்று பெயர் பெற்ற கட்டைய்யனா இப்படிச் செய்தான் என்று ஆச்சரியப்பட்டான். கட்டைய்யன் வீட்டில் நூறு மாங்காய்கள் வேறு கிடைக்கவே அதை நம்ப வேண்டியதாயிற்று கட்டைய்யனை கஜபதி நன்கு அடித்து அனுப்பினான்.

அப்போது கஜபதியின் மாந்தோப்பு காவல்காரன் கட்டைய்யனைக் கண்டு ''நான் தோப்பில் நூறு மாங்காய்களை அறுத்து வைத்திருந்தேன். இது பற்றி சத்தியனிடம் நான் சொன்னேன். அவன் அக்காய்களை உன் வீட்டில் வைத்திருக்கச் சொன்னான். நான் காய்களோடு உன் வீட்



டிற்கு வந்த போது உன் வீட்டினுள் யாரும் இருக்கவில்லை. கதவு மட்டும் திறந்திருந்தது. நான் மாங்காய்களை உள்ளே கொண்டு போய் வைத்தேன். சத்தியனிடம் கூட இந்த விஷயத்தை உன்னிடம் சொல்லும் படியும் கூறினேன் பாவம். வீணாக நீ அடிபட்டாய்'' என்றான்.

உடனே தோப்புக் காவல்காரனும் கட்டைய்யனும் கஜபதியின் வீட்டிற்குப் போய் நடந்ததை எல்லாம் கூறினார்கள். கஜபதி சத்தியனை அழைத்து வரச் சொன்னான். சத்தியனும் ''நான் கட்டைய்யன் தான் திருடன் என்று கூறவில்லையே. நீங்கள் எதாவது பழைய விரோதத்தை மனதில் வைத்துக் கொண்டு கட்டைய்யனை அடித்தீர்களா? நான் கட்டைய்யன் திருடன் என்று சொல்லவில்லை என்று உங்கள் மீது சத்தியம் செய்து கூறுகிறேன்'' என்றான்.

அன்று மாலை கஜபதி ஆற்றில் குளிக்கப் போய் ஒரு சூழலில் அகப்பட்டுக் கொண்டான். ஆனால் சிரமப்பட்டு எப்படியோ அதிலிருந்து வெளி வந்து கரை சேர்ந்தான் பொய்யாகச் சத்தியம் செய்த சத்தியனிடம் விளக்கம் கேட்கவே கஜபதி அவன் வீட்டிற்கு வந்திருந்தான். அவர்கள் எல்லோரும் காத்திருந்தும் சத்தியன் வீடு திரும்பவில்லை அப்போது முருகன் மற்றவர்களிடம்'' இனி இங்கே இருப்பதில் பயனில்லை. நாம் கிராம அதிகாரியிடம் போய் புகார் கொடுப்போம்'' என்றான்.

அது தான் சரி என்று மற்றவர்கள் கூறவே எல்லோரும் கிராம அதிகாரியின் வீட்டை அடைந்தார்கள். அப்போது அந்நாட்டு மன்னன் தன் மந்திரியோடு அங்கே இருந்தான். நால்வரும் தம் புகார்களை மன்னனிடம் கூறவே மன்னனும் ''சத்தியன் அண்டப் புளுகன் என்று தெரிந்தும் ஏன் அவன் சொல்வதை நம்பினீர்கள்?'' என்று கேட்டான்.

கிராம அதிகாரியும் ''அவன் பொய்யாக சத்தியம் செய்கிறான். இதற்காக அவனை தண்டிக்க வேண்டும்'' என்றான். மன்னனும் சத்தியனைத் தேடிப் பிடித்து இழுத்து வரும் படித் தன் வீரர்களுக்கும் கட்டளை இட்டான். அவர்

களும் அவனைப் பிடித்து வந்தனர். அவனும் ''அரசே! இவர்கள் சொல்வது எல்லாம் பொய். இதை உங்கள் மீது சத்தியமாகக் கூறுகிறேன்'' என்றான். அது கேட்டு மன்னன் கோபம் கொண்டு ''இவன் ஆபத்தான பேர் வழி. இவன் என் மீதே சத்தியம் செய்யத் துணிந்து விட்டான் இவனைத் தூக்கில் போடுங்கள்'' என் றான்.

அப்போது மந்திரி குறுக்கிட்டு ''அரசே! இவனைத் தூக்கில் போட வேண்டாம் இவனை நாம் வேறு விதத்தில் பயன்படுத்தி கொள்வோம். அண்டை நாட்டு மன்னன் நம் நாட்டின் மீது படை எடுக்க ஏற்பாடுகளைச் செய்து வருகிறான். இவனை அந்நாட்டிற்கு அனுப்பி அவர்கள் மீது பொய் சத்தியம் செய்ய வைக்கலாம். அவர்களுக்கு ஆபத்தே வரும்'' என்றார்.

மன்னனோ ''இது மந்திரத்தால் மாங்காயை விழவைப்பது போலத் தான் இது சரிப்பட்டு வராது'' என்றான். மந்திரியும் ''நீங்கள் இதை உணரவே இப்படிச் சொன்னேன். சத்தியன் ஒருவர் மீது சத்தியம் செய்ய அவனுக்குக் கெடுதல் விளைந்தது ஏதோ சந்தர்ப்ப வசத்தால் தான். இது காக்கை உட்காரப் பனம் பழம் விழுந்த கதை போலத்தான். இது போலத் தொடர்ந்து நாலைந்து சம்பவங்கள் நிகழ்ந்தால் அது இவன் காரணமாகத்தான் என்றாகி விடுகிறது. பொய் பேசுவது மக்களிடையே உள்ள ஒரு கெட்ட பழக்கம். அதை மக்களே தான் திருத்திப் போக்கிக் கொள்ள முயல வேண்டும்'' என்றார்.

மன்னனும் அங்கிருந்தோரிடம் ''மந்திரி சொன்னதைக் கேட்டீர்களா? சத்தியா! இப்போது உன்னை விட்டு விடுகிறேன். இனியும் இந்த மாதிரி பொய் சத்தியம் செய்தால் கடுமையாக தண்டிப்பேன். இனிமேல் இப்படிச் செய்யாதே'' என்றான். சத்தியனும் அவனது கால்களில் விழுந்து ''இனிமேல் இப்படிச் செய்ய மாட்டேன். இனிமேல் பொய்யே பேச மாட்டேன்'' என்றான்.





# அனுபவம் தேவையா!

நகரில் அழகப்பனும் அருணாசலமும் சேர்ந்து ஒரு செருப்புக் கடையை ஆரம்பித்தார்கள். அப்போது அழகப்பன் அருணாசலத்திடம் ''கடையில் வேலை செய்ய ஒரு பையன் வேண்டுமே. அதற்காக நந்தி என்ற பையனை வரச் சொல்லி இருக்கிறேன். அவனுக்கு இருநூறு ரூபாய் சம்பளம் கொடுத்தால் போதும்'' என்றான். அருணாசலமும் ''நீங்கள் நினைத்தது போலவே நானும் நினைத்து வேலன் என்ற பையனை வரச் சொல்லி இருக்கிறேன். அவன் சுறுசுறுப்புடன் வேலை செய்பவன். செருப்புக் கடைகளில் வேலை செய்த அனுபவம் உண்டு. அதனால் அவனுக்கு முந்நூறு ரூபாய் சம்பளம் கொடுப்பதாகச் சொல்லி இருக்கிறேன்'' என்றான்.

அது கேட்டு அழகப்பன் ''அடடா! கடையில் வேலைக்கு இரண்டு பையன்களா! இப்போதைக்கு இது அதிகம். எனவே குறைந்த சம்பளத்தில் வேலை செய்ய வரும் நந்தியையே வைத்துக் கொள்ளலாம்'' என்றான். அருணாசலமோ ''நான் வேலனை வரச் சொல்லி விட்டேன். அவனுக்கு அனுபவமும் இருக்கிறது. ஆனால் இரண்டு பையன்கள் என்று யோசிக்கிறீர்களா? அதனால் என்ன? ஒரு மாதம் இரண்டு பேர் வேலையையும் பார்ப்போம். யார் திறமைசாலியோ அவனை வைத்துக் கொள்வோம். மற்றவனை போகச் சொல்லி விடலாம்'' என்றான். அழகப்பனும் அப்படியே செய்யலாம் என்று கூறினான்.

கடையில் வேலை செய்ய நந்தியும் வேலனும் வந்தார்கள். இருவரிடமும் அருணாசலம் '''உங்கள் வேலையை ஒரு மாத காலம் பார்த்துவிட்டு உங்களில் யார் வேலைக்கு ஏற்றவன் எனக் கண்டு அவனை நிரந்திரமாக வைத்துக்

—ரேணுகா ரவி—

கொள்வோம்'' என்று கூறினான்.

இரண்டு நாட்கள் கழிந்தன. ஒரு பெரும் பணக்காரர் நல்ல வேலைப் பாடுடைய செருப்பு வாங்க அந்தக் கடைக்கு வந்தார். அவர் ஒரு ஜதை செருப்புகளைத் தேர்ந்தெடுத்தார். அதன் விலை இருநூறு ரூபாய், அவர் தம் பணப்பையை எடுத்து அதிலிருந்து பணத்தை எண்ணிப் பார்த்த போது இருநூறு ரூபாய்க்கு இருபது ரூபாய் குறைவதைக் கண்டார்.

அவர் அழகப்பனிடம் ''பணம் கொஞ்சம் குறைகிறது. நீங்கள் செருப்புகளைஅட்டைப்பெட்டியில் வைத்துக்கட்டி இதோ கடை முன் நிற்கும் என் வண்டியில் வைக்கச் சொல்லுங்கள். வீட்டிற்குப் போனதும் மீதி இருபது ரூபாயை என் வேலையாளிடம் கொடுத்து அனுப்புகிறேன்'' என்று கூறி நூற்று எண்பது ரூபாயைக் கொடுத்தார்.

அழகப்பனுக்கு அவரை முன்பின் தெரியாது. அவரைஎப்படி நம்புவது? அவர் சொன்ன படி பணம் அனுப்பா விட்டால் இருபது ரூபாய் நஷ்டம் தானே என்று யோசிக்கலானான். தன் எஜமானர் நினைப்பதைப் புரிந்து கொண்ட வேலன் செருப்பைப் பணக்காரர் எடுத்துச் செல்ல அனுமதிக்கும் படி ஜாடை காட்டவே அழகப்பனும் ''அதற்கென்ன! தாராளமாக எடுத்துக் கொண்டு போங்கள். வீட்டிற்குப் போய் பணத்தை அனுப்பிவிடுங்கள்'' என்றான்.



இதற்குள் வேலன் பணக்காரரிடம் ''ஐயா! நீங்கள் வண்டியில் போய் உட்காருங்கள். இதோ செருப்புகளைப் பெட்டியில் போட்டுக் கட்டி எடுத்து வந்து நான் உங்கள் வண்டியில் வைக்கிறேன்'' என்றான். பணக்காரரும் வண்டியில் போய் உட்கார, வேலன் சில நிமிடங்களில் செருப்புப் பெட்டியைக் கட்டி எடுத்துப் போய் அவரது வண்டியில் வைத்துவிட்டு வந்தான்.

அப்போது அழகப்பன் ''வேலா! யார் அந்தப் பெரிய மனிதர்? உனக்கு அவரைத் தெரியுமா?'' என்று கேட்டான். வேலனும் ''அவரை எனக்குத் தெரியாது. ஆனால் நம் பணம் இன்னமும் கொஞ்ச நேரத்தில் வந்து விடும். பாருங்களேன்'' என்றான். அழகப்

பனும் ''அதெப்படி அவ்வளவு உறுதியாகக்கூறுகிறாய்?'' எனவே அவனும் ''அவர் எடுத்துப் போன செருப்புப் பொட்டலம்தான் அதற்கு உத்தரவாதம்'' என்றான்.

அழகப்பனோ ''போ. இன்று உன்னால் இருபது ரூபாய் நஷ்டம். இதை உன் சம்பளத்தில் தான் பிடிக்க வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே அருணாசலம் உள்ளே வந்தான். அழகப்பன் அவனிடம் வேலன் செய்ததைக் கூறினான்.

அருணாசலமும் ''வேலா! உனக்குத் தான் அவரைத் தெரியாதே. ஏன் செருப்புகளைக் கொடுத்தனுப்பினாய்?'' என்று கேட்டுக் கொண்டிருக்கும் போதே செருப்பு வாங்கிக் கொண்டு போன பணக்காரர் கோபத்தோடு கடைக்குள் வந்தார்.

அவர் ''என்ன வேலையாளை வைத்திருக்கிறீர்கள்? பெட்டிக்குள் வலதுகால் செருப்புகள் இரண்டை வைத்திருக்கிறான்? இதை மாற்றி சரியான ஜதை கொடுங்கள் இந்தாருங்கள் உங்கள் பாக்கிப் பணம் இருபது ரூபாய்'' என்று பணத்தைக் கொடுத்தார்.

அருணாசலமும் ''ஏண்டா வேலா? செருப்புகளைப் பார்த்து எடுத்துக்கட்டிக் கொடுக்கக் கூடாது? பாவம் பெரிய மனிதரை அலைய வைத்து விட்டாயே. இதை எடுத்துப் போய் சரியான ஜோடியாக வைத்துக் கட்டிக்கொடு'' என்று கோபம் கொண்டவன் போல வேலனை அதட்டிய வாறே சொன்னான்.

பணக்காரர் செருப்புப் பொட்டலத்தை வாங்கிக் கொண்டு போனபின் அருணாசலம் ''பேஷ் வேலா! அவரை மறுபடியும் கடைக்கு வரவழைத்து பாக்கிப் பணத்தையும் கொடுக்கச் செய்து விட்டாயே. இதற்குத் தான் வியாபார அனுபவம் வேண்டும்'' என்றான்.

அழகப்பனும் ''ஆமாம். இப்போது தான் வேலனின் திறமை எனக்குப் புரிகிறது'' என்றான் மகிழ்ந்த வாறே.






விசுவகர்மா நிர்மாணித்த இந்திரப்பிரஸ்தத்தைத் தலை நகராகக் கொண்டு பாண்டவர்கள் தமக்கு கிடைத்த பாதி நாட்டை நன்கு ஆண்டு வந்தார்கள். நாடும் வளமுற்று முன்னேற்றம் அடைந்து வந்தது. அப்போது ஒரு நாள் நாரதர் முனிவர் தருமரைக் காணவந்தார். தருமரும் மற்ற நான்கு பாண்டவர்களும் அவரை மரியாதையுடன் வரவேற்று ஆசனத்தில் அமர்த்தினார்கள். துரௌபதியும் வந்து அவரை வணங்கினாள்.

நாரதரும் அவளை ஆசீர்வதித்து அனுப்பிவிட்டு பாண்டவர்களிடம் ''உங்கள் ஐவருக்கும் இந்த துரௌபதி மனைவி. இவள் காரணமாக உங்களிடையே பகைமையும் பிளவும் ஏற்பட்டு விடக்கூடாது. எனவே நீங்களே சில கட்டுப்பாடுகளை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அவை இல்லாவிட்டால் எவ்வளவு நெருங்கிய உறவு இருந்த போதிலும் எப்படியாவது பகைமை மூண்டு விடும். இதற்கு உதாரணமாக சுந்தன், உபசுந்தன் என்ற இரு சகோதரர்களின் கதையைக் கூறுகிறேன் கேளுங்கள்'' என்று கூறிக் கதை சொல்லலானார்.

இரண்யகசிபுவின் வம்சத்தில் பிறந்த நிகும்பன் என்பவனின் புதல்வர்கள் தாம் சுந்தனும், உபசுந்தனும். அவர்கள் ஒருவரை மற்றவர் ஒரு கணம் கூடப் பிரியாமல் இருந்தனர். எங்கும் சேர்ந்தே இருந்து அன்னியோன்னியமாக இருந்து வந்தார்கள். மூவுலகையும் வெல்லவேண்டுமென்ற ஆசை அவர்களுக்கு ஏற்பட்

டது. அதற்கான சக்தி பெற அவர்கள் விந்திய மலையில் போய் மனித நடமாட்டமே இல்லாத இடத்தில் அமர்ந்து கடுந்தவம் புரியலாயினர். அத்தவத்தால் கோரமான அக்கினிச் சுவாலைகள் கிளம்பி அங்குள்ள காட்டுப் பகுதியையே எரிக்கலாயின.

அவர்களது தவத்தைக் கண்டு பயந்து தேவர்கள் அவர்களது தவத்தை கலைக்க அவர்களின் முன் ரத்தினங்களைக் குவித்தார்கள். அழகிய பெண்களை அனுப்பினார்கள். அவற்றிற்கெல்லாம் சுந்தனும், உபசந்தனும் அசைந்து கொடுக்கவில்லை. அப்போது தேவர்கள் அவர்கள் முன் அவர்களது தாயாரையும், மனைவிகளையும் புதல்வர்களையும் யாரோ ராட்சஸர்கள் துன்புறுத்துவது போன்ற காட்சியை உருவாக்கினார்கள். அதைக் கண்டும் அவர்கள அசையவில்லை.

இதன் பிறகு பிரம்மா அவர்களின் முன் தோன்றி அவர்களுக்கு மூவுலகையும் வெல்லும் அரிய சக்தியையும் பல வரங்களையும், கொடுத்தார். அப்போது அவர்கள் சாகாவரம் கேட்கவே, பிரம்மா ''அதை மட்டும் கொடுக்க இயலாது. உங்களுக்கு வேறு யாராலும் மரணம் ஏற்படாது நீங்கள் சாவதானால் நீங்கள் தாம் ஒருவரை மற்றவர் அடித்துக் கொல்ல வேண்டும்'' என்று கூறி விட்டு மறைந்தார்.

இப்படி அரிய சக்திகளைப் பெற்ற பின் அவர்கள் இந்திரலோகத்திற்குப் போய் அதைக் கைப்பற்றினார்கள்.



பின்னர் பாதாளலோகத்தைக் கைப் பற்றி விட்டு பூவுலகிற்கு வந்து அங்கு எல்லாவற்றையும் நாசப்படுத்தி எல் லோரையும் இம்சிக்கலானார்கள். அப்போது பிரம்மா திலோத்தமை என்ற எழில் மிகுந்த பெண்ணை சிருஷ்டி செய்தார். அவளை அவர் சுந் தனும் உபசுந்தனும் முள்ள இடத் திற்கு அனுப்பி வைத்தார்.



அவள் ஆற்றில் குளித்து விட்டு மலர் கொய்து கொண்டிருக்கையில் சுந்தனும், உபசுந்தனும் அவளைப் பார்த்தார்கள். அவர்கள் ஓடிப்போய் அவளது கைகளை ஆளுக்கு ஒன்றாகப் பிடித்து இழுக்கலானார்கள். அவர்கள் இருவருமே அவள் தம் மனைவியாக வேண்டும் எனக் கூறவே அவளும் ''நான் இருவரையும் எப்படி மணக்க முடியும்? உங்களின் யார் மிகுந்த பல சாலி என்று நிரூபித்தால் நான் அவரை மணந்து கொள்வேன்'' என்றாள்.

அவ்வளவு தான்! அந்த இருவரும் திலோத்தமையை அடைய ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டு முடி வில் இருவரும் இறந்து போனார்கள்.

நாரதர் இந்தக் கதையைக் கூறி ''நீங் களும் அந்த இருவரைப் போல சண்டை போட்டு கொள்ளக்கூடாது. நீங்களே ஒரு ஏற்பாட்டைச் செய்து கொண்டு சண்டை வராமல் பார்த்துக் கொள்ளுங்கள். இப்படிச் செய்வது தான் உங்களுக்கும் நல்லது'' என்றார். பாண்டவர்களும் நாரதரைச் சாட்சி யாக வைத்து கொண்டு ஒரு கட்டுப் பாட்டை விதித்துக் கொண்டார்கள். அதன்படி துரெளபதி ஒவ்வொரு பாண்டவருடன் ஒரு வருடம் இருக்க வேண்டும். அந்த சமயத்தில் மற்ற பாண்டவர்கள் அவர்களிருக்கும் இடத்திற்கு போகக் கூடாது. அதை மீறி யாராவது போனாள், பிரம்சரிய விரதம் மேற்கொண்டு தீர்த்த யாத் திரை செய்து விட்டு வரவேண்டும். நாரதரும் இந்த ஏற்பாட்டைப் பாராட்டி ''இதன்படி நீங்கள் நடந் தால் உங்களுக்குள் சண்டையே வராது'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

துரெளபதியும் இதன்படி ஓராண் டுக்கு ஒரு பாண்டவருடன் வாழ்ந்து வரலானாள். இப்படியாகக் காலம் கழியலாயிற்று. ஒருநாள் ஒரு பிராம்




மணன் அழுது புலம்பிக் கொண்டு அரண்மனை வாசலில் நின்று ''ஐயா! என் யாகப் பசுவை யாரோ திருடிக் கொண்டு போய் விட்டார்கள். அதை மீட்டுத் தந்தால் தான் நான் யாகத்தை முடிக்க முடியும். யாகத்தை முடிக்கா விட்டால் என்னைப் பெரும் பாவமே வந்து சேரும்'' என்று கூறினான்.

அப்போது அங்கிருந்த அர்ஜுனன் ''பிராம்மணரே. கவலை வேண்டாம் உங்கள் யாகப் பசுவை நான் மீட்டுத் தருகிறேன். சற்று இருங்கள். நான் உள்ளே போய் ஆயுதங்களை எடுத்து வருகிறேன்'' என்று கூறி அரண் மனைக்குள் சென்றான். அப்போது துரௌபதியும் தருமரும் அரண்மனை யில் வாழ்ந்து கொண்டிருந்த காலம் அவர்களைக் கடந்து தான் அர்ஜுனன் ஆயுதங்கள் வைக்கப்பட்டிருக்கும் அறைக்குச் செல்ல வேண்டும். கட்டுப் பாட்டை மீறினாலும் அந்தணருக்கு உதவ வேண்டும் என்ற நோக்கத்தில் அவன் தருமரையும் துரௌபதியை யும் கடந்து ஆயுத அறைக்குப் போய்த் தன் வில்லையும் அம்பையும் எடுத்து வந்தான்.

அர்ஜுனன் அந்தணனின் யாகப் பசுவைத் தேடிக் கண்டு பிடித்து அதனை அவரிடம் ஒப்படைத்து விட்டு அரண்மனைக்கு வந்தான். அவன் தருமரிடம் ''அண்ணா. நான் நம் செய்து கொண்ட கட்டுப்பாட்டை மீறிவிட்டேன். அதனால் நான் பிரம்ம சரிய விரதம் மேற்கொண்டு தீர்த்த யாத்திரைக்குக் கிளம்புகிறேன்'' என் றான்.

தருமரோ ''வேண்டாம். நீ செய்தது தவறே அல்ல. ஆபத்து சமயத்தில் ஒரு அந்தணருக்கு உதவினாய். இது புண் ணிய காரியம். இதைச் செய்ய நீ கட்டுப்பாட்டை மீறியது தவறல்ல. எனவே நீ தீர்த்த யாத்திரையாகச் செல்ல வேண்டாம்'' என்றார். அர்ஜு னனோ ''நான் கட்டுப்பாட்டை மீறி யது குற்றமே. அதற்கான தண் டனையை ஏற்கத்தான் வேண்டும். நான் அந்தணருக்கு உதவியது நற்செய லாக இருந்தாலும் கட்டுப்பாட்டை நான் மீறியது குற்றமே இதில் பாசத் திற்கோ அல்லது பெரியவர் சிறியவர் என்ற பிரச்னைக்கோ இடமே இல்

லை'' என்றான்.

தர்மர் அர்ஜுனன் கூறியதை ஏற்க வேண்டியதாயிற்று. அர்ஜுனனும் காவி உடுத்து சடை முடிதரித்து வன வாசத்திற்குக் கிளம்பினான். அவனுடன் பல பௌராணிகர்களும் அந்தணர்களும் சென்றனர். அவர்களோடு அர்ஜுனன் மற்ற விஷயங்களைப் பேசியவாறே பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போய் முடிவில் கங்கா துவாரத்தை அடைந்தான்.

அங்கு பலர் கங்கையில் புனித நீராடி அக்கினி தேவனை வழிபட்டு ஹோமங்கள் செய்து கொண்டிருந்தார்கள். அதைக் கண்ட அர்ஜுனன் மகிழ்ந்து தானும் கங்கையில் நீராடி தேவ, பித்ருதர்ப்பணங்களைச் செய்யலாம் என் நினைத்துகங்கையில் இறங்கினான்.

அப்போது உலூபி என்ற நாக கன்னிகை அர்ஜுனனின் அழகைக்கண்டு மயங்கி நின்றாள். நதியின் இறங்கிய அர்ஜுனனை அவள் பிடித்து இழுத்துக் கொண்டு நாகலோகத்திற்குக் கொண்டு போய் ஒரு அழகிய மாளிகையில் சேர்த்தாள். அர்ஜுனன் அவளைக் கண்டு ஆச்சரியப்பட்டு ''பெண்ணே! நீ யார்? என்னை இங்கு ஏன் அழைத்து வந்திருக்கிறாய்? இது எந்தப் பிரதேசம்?'' என்று கேட்டான்.

அவளும் ''அன்பரே! நான் நாக கன்னிகை. ஐராவத குலத்தைச் சேர்ந்த கௌர்யன் என்ற நாக மன்னனின் புதல்வி நான். என் பெயர் உலூபி.




மன்மதனைப் போல இருக்கும் உங்களை என் சக்தியால் இந்த லோகத்திற்குக் கொண்டு வந்திருக்கிறேன். என் விருப்பத்தை நிறை வேற்றுங்கள்'' என்றாள்.

அர்ஜுனனும் ''ஒரு காரணமாக இப்போது நான் பிரம்மசரிய விரதம் மேற் கொண்டிருக்கிறேன். மேலும் தீர்த்த யாத்திரையை நான் இன்னமும் தொடரவேண்டும். என் விரதத்தை நீ முறியடிக்க முயல்வது சரியல்ல. நான் என் விரதத்திலிருந்து நழுவினால் என்னை மாபெரும் பாவமே சேரும்'' என்றான்.

ஆனால் உலூபி அதனை ஏற்காமல் ''துரௌபதி விஷயத்தில் நீங்கள் ஐவரும் ஏற்படுத்திக் கொண்ட கட்டுப்

பாடு எனக்குத் தெரியும். ஆனால் நீங்கள் என் கோரிக்கையை நிறை வேற்றாவிட்டால் நான் துடிதுடித்து இறந்து போய்விடுவேன். அந்தப் பாவம் உங்களைத்தான் சேரும். என் உயிரைக் காத்து புண்ணியம் சேர்க்க விரும்பினால் என் விருப்பத்தை நிறை வேற்றுங்கள்'' என்றாள்.

அர்ஜுனன் நீண்ட யோசனைக்குப் பின் உலூபியின் விருப்பத்தை நிறை வேற்றுவது என்று தீர்மானித்தான். அவன் அன்றிரவை உலூபியுடன் கழித்து விட்டு மறுநாள் அங்கிருந்து கிளம்பினான். அவளும் அவனை வழி யனுப்ப கங்கா துவாரம் வரை வந் தாள். அவள் அர்ஜுனனுக்கு எந்த நீர் வாழ் பிராணியாலும் ஆபத்து நேராது என வரம் அளித்தாள். அவள் காலக் கிரமத்தில் கர்ப்பவதியாகி இராவந் தன் என்ற மகனைப் பெற்றெடுத்தாள்.

கங்காதுவாரத்திலிருந்து கிளம்பிய அர்ஜுன்ன பல புனிதத் தலங்களுக் குப் போய் பல நதிகளில் நீராடினான். அவன் கிளம்பி பதிமூன்று மாதங் களான போது மணிப்புரம் என்ற நகரை அடைந்தான். அதன் மன்னன் சித்திரவாகனன். அவன் மகள் சித்தி ராங்கதை அவள் மிகவும் அழகான வள். அவளைக் கண்டதும் அர்ஜுன னின் மனம் அவள் பால் சென்றது. அதனால் அர்ஜுனன் சித்திரவாகன னிடம் சித்திராங்கதையைத் தனக்கு மணம் செய்து வைக்கும்படி வேண்டி னான்.

அப்போது சித்திரவாகனன் ''எனக்கு இதில் மகிழ்ச்சியே. ஆனால் ஒரு விஷயம். எங்கள் வம்சத் தில் ஒவ்வொருவருக்கும் ஓரே ஒரு ஆண் குழந்தை தான் பிறக்கும். ஆனால் எனக்கு மட்டும் பெண் குழந்தை பிறந்தது. அதனால் என் மகளுக்குப் பிறக்கும் மகனை நான் என் மகன் போல வளர்த்து வருவேன். இதற்குச் சம்மதித்தால் நீ என் மகளை இப்போதே மணக்கலாம்'' என்றான்.

அர்ஜுனன் அதற்குச் சம்மதித்து சித்திராங்கதையை மணந்து கொண் டான்.



# அம்புலிமாமா செய்திகள்

## அதிசய விஷயம்!

ஒரே பிரசவத்தில் இரட்டைக் குழந்தைகள் பிறப்பதைக் கேள்விப்படுகிறோம். 82 பிரசவங்களுக்கு ஒன்று வீதம் இரட்டை குழந்தைகள் பிறப்பதாகக் கூறுகிறார்கள். இது போல 6,400 பிரசவங்களுக்கு ஒன்று வீதம் ஒரே பிரசவத்தில் மூன்று குழந்தைகளும், 512,000 பிரசவங்களுக்கு ஒன்று



வீதம் ஒரே பிரசவத்தில் நான்கு குழந்தைகளும் 41,000,000 பிரசவங்களுக்கு ஒன்று வீதம் ஒரே பிரசவத்தில் ஐந்து குழந்தைகளும் பிறக்கின்றனவாம். ஆனால் கடந்த ஜூன் மாதம் எகிப்திய மாது ஒருத்தி ஒரே பிரசவத்தில் ஆறு குழந்தைகளைப் பெற்றெடுத்தாளாம். இத்தகைய நிகழ்ச்சி 3,300,000,000 பிரசவங்களுக்கு ஒன்று வீதம்தான் நடைபெறுமாம் அவள் பெற்ற ஆறில் நான்கு ஆண் குழந்தைகள். இரண்டு பெண் குழந்தைகள். இவை 860 கிராமிலிருந்து 1.75 கிலோ எடையுள்ளனவாம். அறுவை சிகிச்சையால் இக்குழந்தைகளை வெளிக் கொண்டு வந்த டாக்டர்கள் இவை நன்கு வளரும் என்றே அபிப்பிராயப்படுகிறார்கள்.

## யார் தெரிகிறதா?

கேரளாவில் ஆர்.எஸ். பிள்ளைக்கும், வத்சலாவுக்கும் நான்கு ஆண்டுகளுக்கு முன் ஒரே பிரசவத்தில் மூன்று குழந்தைகள் பிறந்தன. அவர்களுக்கு நீனா, நீத்து, நிம்மி என்று பெயரிட்டனர். அவர்கள் மூவரும் பார்க்க ஒரே மாதிரி இருந்ததால் சரியாக அடையாளம் கண்டு கொள்ள முடியாமல் போயிற்று. அவர்களை ஒரே பள்ளியில் ஒரு வகுப்பில் சேர்த்தனர். ஆசிரியர்களும் யார் நீனா, யார் நீத்து, யார் நிம்மி என்று திகைக்கலாயினர். வீட்டிலும் சில சமயங்களில் பெற்றோர்களும் திண்டாடலாயினர். அவர்களது நடத்தையைக் கொண்டு பெற்றோர்கள் அவர்களது பெயர்களை மாலு, மீனு, மோலூ என்று மாற்றியும் பார்த்தனர். ஆனாலும் சட்டென அவர்களால் நம் பெண்களை அடையாளம் கண்டு கொள்ள முடிகிறதில்லை.

## எல்லோரும் வழக்கறிஞர்களே!

ஒரே குடும்பத்தைச் சேர்ந்த நான்கு சகோதர்களும் ஒரு சகோதரியும் வழக்கறிஞர்களே. கேரளாவைச் சேர்ந்த வேலு (80), ஜானகி (70), ஆகிய தம்பதிகளின் மகன்களில் மூத்தவர் ராமச்சந்திரன் 1971ல் வழக்கறிஞரானார், இப்போது இவர் வயது 45, அடுத்தவர் ராமபத்திரனும் திருச்சூரில் வழக்கறிஞராக உள்ளார். மூன்றாவதவர் ராமநாதன் குன்னம் குனத்திலும் நான்காதவர் ராமராஜன் வாதாபூரிலும் வழக்கறிஞர்களாக இருக்கிறார்கள். ஐந்தாவதான மகள் ரமாதேவி நாசிக்கில் தன் கணவன் அசோகனுடன் வழக்கறிஞர் தொழில் புரிந்து வருகிறார். ராம பத்திரன் மனைவி சீலாவும் விரைவில் வழக்கறிஞர் ஆகப் போகிறார். ஆனால் வேலுவோ, ஜானகியோ இதுவரை நீதிமன்றத்தில் அடிஎடுத்து வைத்ததுக் கூட இல்லை.

# பூவரசமரம்

பிரிட்டிஷ் மாலுமி கேப்டன் குக் 1769ல் பசிபிக மாக்கடலில் டாஹிட் என்ற தீவில் ஒரு ஆலயத்தினருகே அழகிய மலர்களுள்ள சில மரங்களைப் பார்த்தார். அவற்றிற்கு டெஸ்ஸினியா என்ற பெயரை வைத்தார். கிரேக்க மொழியில் இச் சொல்லிற்கு திவ்வியமானது என்று பொருள். நம் நாட்டிலும் குறிப்பாகத் தென்னிந்தியாவில் இம் மரங்களை ஆங்காங்கே காணலாம். ஆங்கிலத்தில் இதைப் போர்ஷியா மரம் என்றும் டுலிப் மரம் என்று குறிப்பிடுகிறார்கள். இதன் கிளைகள் அடர்ந்து குடை போலவிரிந்து அமைந்திருப்பதால் இதனை ''அம்ப்ரெல்லா ட்ரீ' எனவும் குறிப்பிடுகிறார்கள்.

தாவர இயல் இதற்கு டெஸ்ஸிஹினியாபபாலினி எனப் பெயர் கொடுத்துள்ளது. இதன் இலைகள மிருதுவாயும் இருதயம் போன்ற வடிவிலும் இருந்து நுனி சற்று நீண்டிருக்கும். மரத்திலிருந்து இலைகள் உதிர்ந்தாலும் மரம் பசுமையாகவே இருக்கும்.

இதன் மலர் மஞ்சள் பச்சையாய் அழகாய் இருக்கும். உட்பகுதி சிவப்பாய் இருக்கும். காய்கள் பச்சை நிறத்தில் உருண்டையாக இருந்து பழுத்ததும் கருப்பாக மாறி விடும். வருடம் பூராவும் இம்மரம் பூத்துக் கொண்டே இருந்தாலும் குளிர் காலத்தில் தான் ஏராளமாகப் பூக்கின்றது.

இதன் மரம் மிக உறுதியானது. தண்ணீரில் இருந்தாலும் கெடாததால் இப் பலகைகள் படகுகள் கட்டுவதிலும் கப்பல்களிலும் துறைமுகங்களிலும் பயன்படுத்தப் படுகின்றன. வண்டிச் சக்கரம், பெட்டி முதலியன செய்யவும் இம் மரம் பயன்படுகிறது. இதன் பூக்கள் காய்கள், பழங்கள், மரப்பட்டை, வேர் ஆகியவை மருந்துகள் தயாரிக்கவும் பயன்படுகின்றன.



நம் நாட்டு முனிவர்கள்–8

# சியவனர்

பிருகு மகரிஷியின் மனைவி புலோமை ஆசிரமத்தில் தனியாக இருக்கும் போது அவளை கவர்ந்து செல்ல ஒரு ராட்சஸன் வந்தான். கர்ப்பிணியாக இருந்த அவள் வயிற்றிலிருந்த ஆண் குழந்தை வெளியே குதித்து அந்த ராட்சஸனுடன் போரிட்டது. ராட்சஸன் பயந்து ஓடி விட்டான். குறைப் பிரசவத்தில் பிறந்த அக் குழந்தைக்கு சியவனர் என்று பெயர் வைத்தார்கள்.

சியவனர் வளர்ந்து பெரியவராகி நர்மதை நதிக்கரையில் அமர்ந்து தவம் செய்தார். அவரைச் சுற்றி புற்றுக்கள் ஏற்பட்டன. அவர் எப்போதாவது தான் கண்ணைத் திறப்பார். ஒரு நாள் சர்யாதி மன்னன் தன் பரிவாரங்களுடன் அப் பகுதிக்கு வந்து இளைப்பாற ஓரிடத்தில் தங்கினான். அவனது புதல்வர்களான சிறுவர்கள் 'மினுக்' 'மினுக்'கென மின்னும் ஒரு புற்றின் மீது கற்களை விட்டெறிந்தார்கள். அது சியவனர் இருந்த புற்று. அச் சிறுவர்களின் செய்கையால் கோபம் கொண்டு சியவனர் அவர்களது பெற்றோர்களைச் சபித்தார் அதனால் அவர்கள் நோயுற்றனர்.

மன்னன் முனிவரைக் கண்டு தன் மைந்தர்களின் செய்கைக்காக மன்னிப்புக் கோரினான். அப்போது அவர் மன்னனின் பக்கம் நின்ற அவனது மகள் சுகன்யையை பார்த்தார். அவளைத் தனக்கு மணம் செய்து வைத்தால் அவனை மன்னிப்பதாக சியவனர் கூறினார். மன்னன் தயங்கவே, சுகன்யை அவரை மணந்து கொள்வதாக கூறி அவரது மனைவியானாள்.

சில நாட்களுக்கு பின் தேவ வைத்தியர்களான அசுவினி குமாரர்கள் சியவனரைக் காண அவரது ஆசிரமத்திற்கு வந்தார்கள். சுகன்யை வயதான முனிவரை மணந்து கொண்டிருப்பது கண்டு அவருக்கு இளமை வரும்படிச் செய்வதாகக் கூறினார்கள். அதற்கு சுகன்யை ஒரு பரீட்சைக்கு உட்பட வேண்டும் என அவர்கள் கூறவே அவளும் அதற்குச் சம்மதித்தாள்.

அவர்களிருவரும் சியவனரை அழைத்துக் கொண்டு எதிரிலுள்ள குளத்தில் மூழ்கி எழுந்தார்கள். அப்போது மூவரும் இளைஞர்களாய் ஒன்று போலத் தெண்பட்டனர். அவர்களில் சுகன்யை தன் கணவனைத் தேர்ந்தெடுப்பது தான் பரீட்சை. சுகன்யை அவர்களில் தன் கணவனைக் கண்டு பிடித்து அவரது கரம் பற்றினாள். அசுவினி தேவர்கள் அவள் வென்றதாகக் கூறி அவர்களை ஆசீர்வதித்து விட்டுச் சென்றார்கள்.

சியவனர் இயற்றிய பிராத்தனை சுலோகங்கள் இன்றும் கூறப்படுகின்றன.



# உங்களுக்குத் தெரியுமா?

1. அமெரிக்கா அதிபர் வசிக்கும் மாளிகைக்கு ‘வெள்ளை மாளிகை’ என ஏன் பெயர் வந்தது?
2. திப்புசுல்தானின் தலைநகர் எது?
3. ‘டாஸ் காபிடலை’ எழுதியவர் யார்?
4. சபர்மதி சாது என்று யாருக்குப் பெயர்?
5. வரிக்குதிரைகளின் சிறப்பு என்ன?
6. ஹோல்கார்கள் எங்கு ஆட்சிபுரிந்தார்கள்?
7. ரோடீஷியாவின் இன்றைய பெயர் என்ன?
8. ரவிந்தர நாதரின் எந்த நூலுக்காக நோபல் பரிசு வழங்கப்பட்டது?
9. முதன் முதலாக ‘ரோபோட்’டை எப்போது உருவாக்கினார்கள்?
10. ஆரிய சமாஜத்தை நிறுவியவர் யார்?
11. மிகப் பழைய விளையாட்டு எது?
12. கோலார் தங்க வயல்கள் எந்த மாநிலத்தில் உள்ளன?
13. சாக்லெட் தயாரிக்கும் ஒரு நிறுவனம் தனக்கென ஒரு ஊரை அமைத்துக் கொண்டது. அந்த ஊரின் பெயர் என்ன?
14. கீத கோவிந்தத்தை எழுதியவர் யார்?
15. டைனமெட்டைக் கண்டு பிடித்தவர் யார்?
16. இந்திய தேசிய காங்கிரசின் முதலாவது பெண் தலைவர் யார்?

## விடைகள்

1. தீவிபத்தினால் ஏற்பட்ட கருகிய பகுதிகள் தென் படாமலிருக்க மாளிகை முழுவதும் வெள்ளை நிறம் பூசப்பட்டு தொடர்ந்து அதே வெள்ளை வண்ணம் பூசி வருவதால்.
2. ஸ்ரீரங்கப்பட்டணம்
3. கார்ல் மார்க்ஸ்
4. மகாத்மா காந்தி
5. எந்த இருவரிக் குதிரைகளின் மீதுள்ள வரிக்கோடுகள் ஒன்று போல இராத.
6. இந்தூர். இன்றைய மத்தியப் பிரதேசப் பகுதி.
7. ஜிம் பரம்வே
8. கீதாஞ்சலி
9. 1962ல் அமெரிக்காவில்
10. சுவாமி தயானந்த சரஸ்வதி
11. போலோ. கி.பி. முதலாவது நூற்றாண்டு
12. கர்நாடகம்.
13. போர்ன்வில் (காட்பரி நிறுவனம்)
14. ஜெயதேவர்
15. ஆல்ப் பரட் நோபல். ஸ்வீடன் நாட்டு வேதியல் நிபுணரி 1867ல்
16. டாக்டர் அன்னி பெசண்ட் - 1917ல் நடந்த காங்கிரஸ் மாநாட்டில்.



# லட்டுப் பிசாசுகள்

ஒருநாள் மாலை வேப்பம் பாளையத்திலிருந்து ஆறு மாட்டு வண்டிகளில் ஒரு கல்யாண கோஷ்டி புளியம் பாளையத்திற்குப் போய்க் கொண்டிருந்தன. புளியம்பாளையக் கோவிலில் தான் கல்யாணம். எல்லோ வண்டிகளுக்குப் பின் சென்ற வண்டியில் தான் பட்சணங்களோடு சமையல் காரர்கள் சென்று கொண்டிருந்தனர்.

தலைமை சமையல்காரர் கிட்டு வண்டியை நன்கு பார்த்து விட்டு ''அடடா! லட்டுக் கூடையை எடுத்து வைக்க வில்லையா? டேய் மணி! நீ வண்டியிலிருந்து இறங்கி நம் ஊருக்குப் போய் லட்டுக் கூடையை எடுத்துத் தலைமேல் வைத்துக் கொண்டு குறுக்கு வழியில் நாளை விடிவதற்குள் புளியம் பாளையத்திற்கு வந்து சேர். உனக்கு பத்து ரூபாய் கூடக் கொடுக்கிறேன்'' என்றார். மணியும் உடனே வண்டியிலிருந்து குதித்து வேப்பம் பாளையத்திற்கு ஓடினான்.

அவன் வீட்டிற்குப் போய் லட்டுக் கூடையைக் கண்டு பிடித்து அதைச் சுமந்து கொண்டு குறுக்கு வழியில் நடக்கலானான். அப்போது நல்ல நிலா வெளிச்சம். பால் போல நிலா காய்ந்து கொண்டிருந்தது. கொஞ்சம் வேக வேகமாகவே மணி அடிவைத்து நடக்கலானான். ஆனால் அவனால் அப்படி வெகு தூரம் நடக்க முடியவில்லை. சற்றுக் களைத்துப் போய் கூடையை இறக்கித் தன் பக்கத்தில் வைத்துக் கொண்டு ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தான்.

அது கடற்கரைப் பகுதி. அப்போது அங்கு பாய் மரப்படகு ஒன்று கரைக்கு வந்தது. அதிலிருந்து அயல் நாட்டு உடைகளை அணிந்த பத்து பிசாசுகள் கரை இறங்கின. அவை 'கீச்', 'கீச்' சென்று ஏதோ புதிய மொழியில்

—கி. வெங்கடாசலம்—

பேசிக் கொண்டே வந்தன. அவற்றின் பின் புளி மூட்டை போல ஒரு கருப்புப் பிசாசு தன் கைத்தடியைச் சுழற்றிய வாறே வந்து கொண்டிருந்தது.

இதையெல்லாம் பார்த்த மணிக் குக் கைகால்கள் வெட வெட வென்று நடுங்கத் தொடங்கின. அவனும் ''ஐயோ! ஒரு பத்து ரூபாய்க்கு ஆசைப் பட்டு இப்படி ஒரு ஆபத்தில் வந்து மாட்டிக் கொண்டேனே. இனி மேலும் இங்கே இருக்கக் கூடாது'' என்று எண்ணி விட்டுக் கூடையை எடுத்துத் தலைமீது வைத்துக் கொண்டு அங்கிருந்து ஓடலானான்.

ஆனால் அந்தக் கருப்புப் பிசாசு தடியைச் சுழற்றியவாறே ஓடி வந்து மணியை வழி மறித்தது. அது ''தம்பீ! ஓடாதே. அந்த அயல்நாட்டுப் பிசாசு கள் பார்த்து விட்டால் நமக்குத் தான் அவமானம். நான் இந்தியப் பிசாசு. அயல் நாட்டுக்குப் போக ஆசைப்பட் டேன்.. யோகவும் போய் அந்நாட்டு மொழியையும் கற்றுக்கொண்டேன்'' என்றது. இதற்குள் அந்த அயல் நாட் டுப் பிசாசுகளும் அங்கு வந்து விட் டன. அவை தம் மொழியில் ஏதோ கேட்க கருப்புப் பிசாசு அவற்றின் மொழியிலேயே பதில் கூறியது.

இதற்குள் மணி சுதாரித்துக் கொண் டான். அவன் கருப்புப் பிசாசிடம் ''இவை என்ன கேட்கின்றன?'' என்று கேட்டான். அதுவும் ''அவை நீ ஒரு பிசாசா அல்லது மனிதனா என்று கேட்டன. நான் உயிருள்ள மனிதன் என்று கூறினேன்'' என்றது. இதற்குள் அயல்நாட்டுப் பிசாசுகள் ஏதோ





வாசனை பிடிப்பது போல மூக்கால் முகர்ந்தவாறே கருப்புப் பிசாசிடம் ஏதோ கேட்டன.

கருப்புப் பிசாசும் மணியிடம் ''இவற்றிற்கு ஏதோ 'கம்' மென்று வாசனை வருவது தெரிகிறதாம். ஆமாம். இந்தக் கூடையில் என்ன இருக்கிறது?'' என்று கேட்டு கூடையின் மூடியை விலக்கிப் பார்த்தது. மற்ற பிசாசுகள் ஓடி வந்து அந்தக் கூடையைச் சுற்றி நின்றன. கருப்புப் பிசாசு கூடையிலிருந்து ஒவ்வொரு லட்டாக எடுத்து அப்பிசாசுகளுக்குக் கொடுத்தது.

அவை லட்டுவை ருசித்துச் சாப்பிட்டன. அவற்றில் வயதானதாகத் தென்பட்ட பிசாசு ஏதோ கூறி கூடையிலிருந்த லட்டுகளை எல்லாம் எடுத்து ஒரு மூட்டையாகக் கட்டியது. கருப்புப் பிசாசும் மணியிடம் ''இவர்களுக்கு லட்டு மிகவும் பிடித்து விட்டதாம். மறுபடியும் இந்நாட்டிற்கு வரும் போது இந்த அதிர்ஷ்டம் இருக்க வேண்டும் என்று சொல்கிறது'' என்றது.

அப்போது மணி ''இவரது அதிர்ஷ்டம் என் துரதிர்ஷ்டமாகப் போகிறது. இவை நாளை கல்யாணத்திற்குப் போக வேண்டிய லட்டுகள். இவை இல்லாது நான் போனால் எங்கள் தலைவர் கிட்டு என் உடம்புத் தோலை உரித்து உப்பு தடவி விடுவார்'' என்றான். கருப்புப் பிசாசு இதைத் தலைமைப் பிசாசிடம் கூறியது. அப்பிசாசும் மணியின் கையிலிருந்த கூடையை வாங்கிக் கொண்டு மாயமாய் மறைந்தது.

இரண்டு நிமிடங்களுக்குப் பின் அது கூடையோடு வந்து மணியிடம் அதைக் கொடுத்தது. மணி அதைத் திறந்து பார்த்து அதிர்ந்து போனான். ஏனெனில் கூடை நிறையக் கண்ணைப் பறிக்கும் தங்க நாணயங்கள் இருந்தன.

அப்போது தலைமைப் பிசாசு கருப்புப் பிசாசிடம் ஏதோ கூறவே அதுவும் மணியைப் பார்த்து ''இவை உனக்கே. அடுத்த பௌர்ணமியின் போது மறுபடியும் இங்கே நீ வா. அப்போது லட்டு மட்டுமல்லாமல் இன்னும் பல இனிப்பு வகைகளைக் கொண்டு வரச்

சொல்கின்றன'' என்றது. அதற்குப் பின் எல்லாப் பிசாசுகளும் குதித்து ஆடிப்பாடிக் கொண்டிருந்தது தமது படகில் ஏறிச் சென்று விட்டன.

மணி தங்க நாணயக் கூடையோடு தன் ஊருக்கே திரும்பிச் சென்றான். அங்கு அவன் தன் வீட்டை அடைந்த போது நள்ளிரவிற்கும் மேலாகிவிட்டது. கதவைத் திறந்த அவனது மனைவி என்ன விஷயம் என்று கேட்பதற்குள் அவன் அவளைப் பேச விடாமல் மடக்கி தன் பின்னால் வரும் படிச் சைகை செய்தான்.

கதவு தாளிடப் பட்டிருக்கிறதா என்று மணி பார்த்துவிட்டு கீழே ஒரு துணியை விரித்துக் கூடையிலிருந்த தங்க நாணயங்களை அதில் கொட்டினான். அதைக் கண்ட அவன் மனைவி பேச்சு மூச்சு இல்லாமல் கற்சிலை போல் நின்றாள். மணி அவளிடம் பிசாசுகளைப் பற்றிக் கூறி ''நமக்கு இப்போது சுக்கிரதசை அடிக்கிறது. கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிளந்து கொட்டும் என்பது போல இந்தப் பிசாசுகளால் நமக்கு நிறையப் பணம் கிடைக்கப் போகிறது. அடுத்த பௌர்ணமியின் போது விதவிதமான இனிப்புப் பண்டங்களைத் தயாரித்து எடுத்துப் போக வேண்டும். அதற்குப் பிறகு நான் இந்த ஊரில் மிகப் பெரிய பக்ஷணக் கடையைத் திறக்கப் போகிறேன் இந்த விஷயம் ரகசியமாக இருக்கட்டும். யாருக்கும் சொல்லாதே'' என்றான்.

ஆனால் மணியின் மனைவி முதல் வேலையாக அந்த ரகசியத்தை அடுத்த





வீட்டு அம்புஜத்திடம் சொன்னாள். அம்புஜத்தின் கணவன் ஒரு சிறு பக்ஷணக் கடை நடத்தி வந்தான். அவன் பெயர் நரசிம்மம். பெயரில் தான் நரசிம்மமே யொழிய அவன் தன் மனைவியைக் கண்டால் பயந்து நடுங்குபவன். அவனிடம் அவள் மணியின் ரகசியத்தைக் கூறி ''வரும் பௌர்ணமியன்று நீங்கள் இரண்டு கூடைகளில் இனிப்புப் பக்ஷணங்களை எடுத்து கொண்டு போய் அந்தப் பிசாசுகளிடம் கொடுத்துவிட்டு இரண்டு கூடைகள் நிறையத் தங்க நாணயங்கள் வாங்கி வரவேண்டும். தெரிந்ததா?'' என்றாள்.

நரசிம்மமும் ''ஆகா! நீ சொல்கிற படியே செய்கிறேன்'' என்றான். அப்போது அம்புஜம் ''நீங்கள் கூடைகளோடு அங்கே போகும் போது இந்த அடுத்த வீட்டு மணி தன் பக்ஷணக் கூடையோடு அங்கே வந்து விடக் கூடாது. அதற்கு நான் ஒரு திட்டம் போட்டிருக்கிறேன். அதன் படிச் செய்ய வேண்டும்'' என்று சொல்லித் தன் திட்டத்தை அவனிடம் கூறினாள்.

அம்புஜம் சொன்ன படி நரசிம்மம் பௌர்ணமிக்கு இரண்டு நாட்களுக்கு முன் வெளியூருக்குப் போய் விட்டு மறுநாள் திரும்பி வந்து நேராக மணியின் வீட்டிற்குப் போனான். அவன் மணியின் மனைவியிடம் ''நேற்று நான் உன் ஊருக்கு ஒரு வேலையாக போயிருந்தேன். உன் அம்மாவுக்கு ஒரே காய்ச்சல். படுத்த படுக்கையாக இருக்கிறாள். உன்னை உடனே கிளம்பி வரும் படி சொல்லச் சொன்னாள். உனக்கு தகவல் சொல்ல ஒரு ஆளை அனுப்பினார்களாமே. அவன் இன்னும் வரவில்லையா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்டதும் மணியின் மனைவி தன் கணவனிடம் விஷயத்தைக் கூறி அவனையும் அழைத்துச் கொண்டு தன் ஊருக்குக் கிளம்பினாள். அம்புஜம் தன் திட்டம் வெற்றியடைந்தது கண்டு மகிழ்ந்து போனாள். அவள் இரண்டு கூடைகளுக்கு பதில் ஐந்து கூடை இனிப்புப் பண்டங்களைத் தயாரித்து எடுத்து ஒரு வண்டியில் வைத்துக் கொண்டு

பௌர்ணமியன்று தன் கணவனுடன் கடற்கரைக்குச் சென்று பிசாசுகளின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

நள்ளிரவாவதற்குச் சற்று முன் பிசாசுகளின் படகு தென்பட்டது. அது கரையோரம் வந்து நின்றது அயல் நாட்டு பிசாசுகள் கரை இறங்கி வரவில்லை கருப்புப் பிசாசு தடியைச் சுழற்றியவாறே வந்து கொண்டிருந்தது. அம்புஜம் அதனிடம் போய் நிற்கவே அது ''அந்தப் பயல் எங்கே?'' என்று கேட்டது. அதற்கு அம்புஜம் ''அவன் தலை கால் புரியாமல் திரிகிறான். அதனால் நாங்கள் உங்களுக்கு இனிப்புப் பண்டங்களை நிறையவே தயாரித்துக் கொண்டு வந்திருக்கிறோம்'' என்றாள் சற்றும் பயப்படாமல்.

அதைக் கேட்ட கருப்புப் பிசாசு முணு முணுத்தவாறே ''இனிப்புப் பண்டங்களா? யாருக்கு வேண்டும்? அவன் கொடுத்த லட்டுகளை அந்தப் பிசசுகள் தின்றதால் நோய் வாய்ப்பட்டுப் படுத்து விட்டன. அதனால் அவை என் மீது கோபம் கொண்டு என் நாட்டிற்கே போய் விடும் படிக் கூறித் துரத்தி விட்டன. இனிமேல் நான் இங்கே தான் இருந்தாக வேண்டும் வேறு வழியில்லை'' என்று கூறி அது சற்று தூரத்திலுள்ள ஒரு தோப்பிற்குள் போய் மறைந்தது.

இதைக் கண்ட நரசிம்மம் தன் மனைவியிடம் ''நீ பேராசைப்பட்டாய் இப்போது பார்! நம் பணத்தை எல்லாம் போட்டு இந்த இனிப்புப் பண்டங்களைத் தயாரித்து எடுத்து வந்தது வீணாகத்தானே போயிற்று'' என்று கூறி தலை மேல் கையை வைத்துக் கொண்டு அங்கேயே உட்கார்ந்து விட்டாள்.

அம்புஜமும் ''சரி, இனி ஊருக்குப் போக வேண்டாம். என் பிறந்த ஊருக்கே போவோம். கூடைகளை வண்டியில் எடுத்து வைத்து வண்டியை ஓட்டுங்கள்'' எனவே நரசிம்மமும் அவளது ஊருக்குப் வண்டியை ஓட்டலானான்.






# இரு உள்ளங்கள்

பிரயாகையில் வெகு நாட்களுக்கு முன் ஒரு வியாபாரி இருந்தான். அவன் மிகவும் நல்லவன். தர்ம சிந்தனை கொண்டவன் அவனது மனைவியும் அவனுக்கு ஏற்ப குணவதியாகவே இருந்து வந்தாள். ஆனால் இவர்களது மகன் சசிகுமாரனோ நேர்மாறாக கெட்ட பழக்கங்களை கொண்டவன் அவனது நண்பர்களும் கெட்டவர் களே. தாயும் தந்தையும் அவனுக்கு நற்போதனைகள் செய்தும் அவை அவன் காதில் ஏறவில்லை.

அவனது செயல்களால் அவர்களால் ஊரில் தலை நிமிர்ந்து நடக்க முடியவில்லை. அந்த வியாபாரியின் ஆருயிர் நண்பர் அர்ச்சகர் அம்பாசங்கர். அவரிடம் வியாபாரி தன் மகனின் போக்கை மாற்ற என்ன செய்யலாம் என்று யோசனை கேட்டார்.

அதற்கு அர்ச்சகர் ''நீங்களும் உங்கள் மனைவியும் அவன் மீது அதிகப் பாசம் வைத்து அவன் போக்கில் போக விட்டதே இதற்குக் காரணம். அவன் உங்களை விட்டுச் சில வருடங்கள் பிரிந்திருந்தால் திருந்தி விடுவான் அவனை இந்த ஊரிலிருந்து வேறு எதாவது ஒரு ஊருக்கு அனுப்பி விடுங்கள். அப்போது அவனுடைய இந்தக் கெட்ட நண்பர்கள் இருக்க மாட்டார்கள். கையிலும் செலவு செய்யப் போதிய பணமும் இராது. அப்போது அவன் தன் பொறுப்பை உணர்ந்து தன்னால் திருந்தி விடுவான்'' என்றார்.

வியாபாரியும் வீட்டிற்குப் போய் தன் மகனை அழைத்து ''சசி! நீ வேறு ஊர்களுக்குப் போய் பெயர் பெற்றால் நான் மகிழ்ச்சி அடைவேன். நீ போகும் ஊர் நல்லதாக இருக்க வேண்டும். அங்கு உனக்கு நல்ல நண்பர்கள் கிடைக்க வேண்டும். அப்படிப்பட்ட ஒரு நகரத்திற்கு நீ போகத் தயாரா?''

—பாபாநாசம் சாமா—

என்று கேட்டான். சசியும் ''ஓ! போகிறேன். என்னைக் காசிக்கு அனுப்புங்கள். அங்கு நல்ல பெயர் பெறுவேன்'' என்றான். வியாபாரி தன் மகன் புனிதத் தலத்தை தேர்ந்தெடுத்ததற்கு மகிழ்ந்து அங்குள்ள நல்லவர்களின் சேர்க்கையால் திருந்தி விடுவான் என நம்பினான்.

ஆனால் சசியோ தன் நண்பர்கள் காசியைப் பற்றி அவர்கள் பார்த்த விதத்தில் வர்ணித்திருந்தால் அங்கு போகத் துடித்துக் கொண்டிருந்தான். அங்கும் இங்குள்ளது போல நண்பர்கள் கிடைப்பார்கள் என்றும் தன் மனம் போன போக்கில் சூதாட்டம், குடி என்று சந்தோஷமாகக் காலம் கழிக்கலாம் என்றும் அவன் என்னி மகிழ்ந்தான். காசியில் அம்பாசங் கருக்கு தூர உறவினர் ஒருவர் இருந்தார். அதனால் அவருக்கு ஒரு கடிதம் எழுதி அர்ச்சகர் சசியிடம் கொடுத்தார். அதை வாங்கிக் கொண்டு சசி காசிக்குக் கிளம்பினான்.

அர்ச்சகர் கூறியது போல எல்லாம் நல்ல விதமாக நடப்பதாக வியாபாரி எண்ணினான். ஏனெனில் சசியைப் பற்றி நல்ல விதமாகவே காசியிலிருந்து கடிதங்கள் அர்ச்சகருக்குக் கிடைத்து வந்தன. அவற்றை அவர் எடுத்துப் போய் வியாபாரிக்குப் படித்துக் காட்டியும் வந்தார். இதனால் வியாபாரியும் அவர் மனைவியும் தம் மகன் நல்ல விதமாய்த் திருந்துகிறான் என்று எண்ணி மகிழ்ந்தார்கள்.



இச் சமயத்தில் இடி விழுந்தது போல ஒரு செய்தி அர்ச்சகருக்குக் காசியிலிருந்து வந்தது, சசியை யாரோ சில முரடர்கள் தாக்கிக் கொன்று விட்டார்களாம். அதற்குக் காரணம் சூதாட்டத்தில் ஏற்பட்ட தகராறு தானாம். இந்தச் செய்தியை அர்ச்சகர் வியாபாரிக்கு மட்டும் தெரியப்படுத்தினார். வியாபாரியும் ''இதை என் மனைவிக்குத் தெரியப்படுத்த வேண்டாம். அவள் இருதய நோயாளி இதைக் கேட்டால் உடனே அவளது உயிர் போய்விடும். அதனால் இச் செய்தியை அவளுக்குச் சொல்லாமல் எப்போதும் போல வந்து உங்கள் உறவினர் கடிதம் எழுதியதாகக் கூறி ஒரு கடிதத்தைப் படித்துக் காட்டி



விட்டுப் போங்கள். அவள் உயிருள்ள வரை அவளுக்குத் தன் மகன் முரடர்களால் தாக்கப்பட்டு இறந்தான் என்பது தெரியவே வேண்டாம்'' என வேண்டினார்.

அர்ச்சகரும் ''நீங்கள் கவலைப் படாதீர்கள். நீங்கள் கூறியபடியே செய்கிறேன். உங்கள் மனைவிக்கு எவ்வித ஆபத்தும் நேராது'' என்றார். அதன்படி அவர் மாதம் ஒருமுறை வியாபாரியின் வீட்டிற்குப் போய் காசியிலிருந்து கடிதம் வந்திருப்பதாகக் கூறி தாமே எழுதி எடுத்து வந்த கடிதத்தைப் படித்துக் காட்டி வரலானார்.

இப்படியே அவர் ஒவ்வொரு கடிதத்திலும் சசி மிகவும் முன்னேறிக் கொண்டிருப்பதாக எழுதிக் கொண்டு போய் வியாபாரியிடமும் அவர் மனைவியிடமும் படித்துக் காட்டி வரலானார். இப்படி அவர் எழுதிப் படித்த கடிதங்கள் எவ்வளவோ!

ஒவ்வொரு முறையும் அர்ச்சகர் வியாபாரியின் வீட்டிற்குப் போன போது வியாபாரியும் அவரது மனைவியும் அவரை மிகவும் அன்புடன் வரவேற்றுப் பரிவுடன் பேசினார்கள். அவர் சொன்னதையெல்லாம் கவனமாகக் கேட்டார்கள். வியாபாரியின் மனைவி நோயுற்றுப் படுத்திருந்தாலும் கூட அர்ச்சகரை கண்டதும் முகமலர்ச்சியுடன் எழுந்து வரவேற்று வந்தாள்.

இவ்வளவு நல்ல பெண்மனியை நான் ஏமாற்றி வருகிறேனே என்று அர்ச்சகர் பல முறை எண்ணி வருந்தியது உண்டு. ஆனால் தம் கட்டுக் கதைகளை நம்பி அவள் மகிழ்ச்சி அடைவது கண்டு அவர் ''நான் செய்வ்து நல்லதற்கே. இந்தப் பெண்மணியின் சந்தோஷத்தை விட வேறு என்ன வேண்டும்?'' என்று எண்ணினார். இப்படியே நான்கு ஆண்டுகள் கழிந்தன. வியாபாரியின் மனைவியின் நோய் தீவிரமாகியது. முடிவில் அவளால் எழுந்து நடமாடக் கூட முடியவில்லை.

அவள் இன்னும் அதிக நாட்கள் உயிர் வாழ மாட்டாள் என்று வைத்தியர்கள் கூறி விட்டார்கள். ஒரு நாள் அவள் நிலை மோசமாகி விட்டது என்று அர்ச்சகருக்குத் தகவல் கிடைத்

தது. அர்ச்சகரும் உடனே அவளைக் காணச் சென்றார் அப்போது வியா பாரி வீட்டில் இருக்கவில்லை.

அர்ச்சகரைக் கண்டதும் வியாபாரி யின் மனைவி ''நான் இந்த உலகை விட்டே போய் விடப் போகிறேன். இனிமேல் என் கணவரைப் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு உங் களுடையதே'' என்று கண்ணீர் ததும் பக் கூறினாள்.

அப்போது அர்ச்சகர் ''கவலைப் படாதீர்கள். உங்கள் உடம்பிற்கு ஒன்றும் இல்லை. நீங்கள் விரைவில் குணமடைந்தும் விடுவீர்கள். கவ லைப்பட வேண்டாம். உங்கள் மகன் சசி காசியிலிருந்து புறப்பட்டு விட்டா னாம். சீக்கிரமே வந்து விடுவான். நீங்கள் அவனைப் பார்க்கத்தான் போகிறீர் கள்'' என்றார். அது கேட்டு வியாபாரியின் மனைவி சிரித்து ''ஆம் அவனைப் பார்க்கத்தான் போகிறேன். ஆனால் இந்த உலகத்தில் இல்லை. மேலுலகத்தில்தான். ஆச்சரியப்படு கிறீர்களா? எனக்கு வெகு காலத்திற்கு முன்பே அவன் இறந்து விட்டான் என் பது தெரியும். ஆனால் காசியிலுள்ள உங்கள் உறவினர் எவ்வளவு உயர்ந்த உள்ளம் படைத்தவர்! அந்தச் செய்தி யைத் தெரிவித்தால் நாமெல்லாம் வருத்தப்படுவோம் என்று எப்படி யெல்லாம் கடிதம் எழுதி வந்தார். சசி இறந்தான் என்பது என் கணவருக்குத் தெரிந்து விடக் கூடாது என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். நல்ல வேளை! இது வரை அவர் அறிய வில்லை. இனியும் அவர் அறிந்து கொள்ளாதபடி நீங்கள் தாம் பார்த்துக் கொள்ள வேண்டும். இப்படி வாக்குக் கொடுத்தாலே நாம் நிம்மதியாகச் சாவேன்'' என்றாள். அர்ச்சகர் தலை ஆட்டவே அவள் உயிரும் உடலை விட்டுப் பிரிந்தது.

அர்ச்சகரும் ''ஆகா! இவர்கள்தான் சரியான தம்பதிகள். இருவருமே தம் மில் மற்றவர் மனம் வருந்தக் கூடாது என்று எப்படி முயன்றார்கள்!'' என வியந்தவாறே தன் வீட்டிற்குச் சென் றார்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

*இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 ஜனவரி மாத இதழில் வெளியிடப்படும்.*


Mahantesh C. Morabad


Mahantesh C. Morabad

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ நவம்பர் 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இருதலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை-600 026.

## செப்டம்பர் மாதப் போட்டி முடிவு

| | | |
|---|---|---|
| முதலாவது போட்டோ | : | கால் வண்ணம் அங்கே கண்டேன். |
| இரண்டாவது போட்டோ | : | கை வண்ணம் இங்கே கண்டேன். |
| பரிசு பெற்றவர் | : | ஈ. சுப்பலட்சுமி, திருநெல்வேலி-627007. |




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

AMBULIMAMA (Tamil) November 1995 Regd. No. M. 4863